# சாப்பிட்டதும் கையெல்லாம் எண்ணெய்ப் பிசுக்கா?

சில உணவு வகைகளைச் சாப்பிட்டதும் கையில் ஏற்படும் எண்ணெய்ப் பிசுபிசுக்கு போகாது. அதன் பிறகு அந்த மணமும் உங்களுக்கு எரிச்சலூட்டும். இதற்குக் காரணம் நீங்கள் தேர்ந்தெடுக்கும் சமையல் எண்ணெய்தான்.

இருமுறை சுத்திகரிக்கப்பட்ட <u>சுப்ரீம்</u> சமையல் எண்ணெய், பிசுக்கற்றது. சாப்பிட்ட பிறகும் கையில் எண்ணெயின் அடையாளமே தெரியாது!

<u>சுப்ரீம்</u> சமையல் எண்ணெயில் செய்த உணவு பொருட்களில் எண்ணெயின் அடையாளமே தெரியாது. எனவே அவற்றின் உண்மையான மணமும் சுவையும் என்றுமே மாறுவதே இல்லை!

<u>சுப்ரீம்</u> சமையல் எண்ணெய் சமையலுக்குக் குறைந்த அளவே தேவைப்படுவதால் அது சிக்கனத்திற்கும் வழி வகுக்கிறது.

## சுப்ரீம்

**கொலஸ்ட்ரால் இல்லாதது**

*அதிக சேமிப்பு. ஆரோக்கியம் அள்ளித் தரும் எண்ணெய்-சுப்ரீம்.*




இது ஒரு எஸ்.எஸ்.டி. ஆயில் மில்ஸின் தரமான தயாரிப்பு.



சரித்திர ஏடுகளைப் புரட்டினாலும்
சமகாலச் சிந்தனை!

**அமரர் கல்கி**

எழுதிய அற்புதத் தொடர்

படிக்கின்ற
ஒவ்வொரு
பெண்மணியையும்
தலைநிமிரச்
செய்யும்!

ஒவ்வொரு
ஆண்மகனையும்
நெஞ்சம்
நெகிழ
வைக்கும்!

# தியாக பூமி

விரைவில்
ஆரம்பமாகிறது

உங்கள் கல்கி பிரதிக்கு இன்றே உள்ளூர் ஏஜெண்டிடம் சொல்லி வையுங்கள்!

# சூப்பர் சமாளிப்பு

நண்பன் கேமரா கொண்டு வந்திருந்தான். பயங்கர பந்தா. லோ ஆங்கிள், பேக்-லைட்டிங் அப்படி, இப்படீன்னு உடான்ஸ் விட்டுக்கிட்டிருந்தான். எனக்குத் தாங்கலை, ''குடுறா நான் ஒண்ணு எடுக்கறேன். ரெண்டு பேருக்கும் போட்டி, யார் எடுத்தது நல்லா வந்திருக்குன்னு பாப்போம்'' அப்படீன்னு வாங்கிட்டேன். நான் 'கிளிக்' பண்ற நேரத்துல ஒரு பொண்ணு குறுக்க போயிடுச்சி. நான் என்னவோ அதைத்தான் போட்டோ எடுத்துட்டேன்னு ஒரே குதி! மாஸ்டர் வரைக்கும் விஷயம் போயிடுச்சி. நான் சத்தியம் பண்ணேன் - இல்லவே இல்லைன்னு. சரி, ஊருக்குப் போய் டெவலப் பண்ணிப் பார்த்துட்டாப் போச்சுன்னு ஸார், சொல்லி, ரோலைக் கழற்றி வாங்கிக்கிட்டார்.



* சுப்பிரமணியன்

எனக்கு அந்தப் பொண்ணை போட்டோ எடுக்கற ஐடியாவெல்லாம் இல்லையே தவிர கண்டிப்பா அது விழுந்திருக்கும்னு தெரியும். அதனால மாஸ்டரை ஃபாலோ பண்ணி, அவர் எந்த ஸ்டுடியோல தரார்னு பார்த்துக்கிட்டு, ஸ்டூடியோகாரனுக்கு 'ஸம்திங்' தள்ளி, அந்த நெகடிவ்வை மட்டும் கட் பண்ணி வாங்கிட்டேன். அப்பாடான்னு இருந்தது!

**ஏதாவது இடக்காகச் செய்து செமத்தையாக மாட்டிக் கொள்வதற்கே உருவான பருவம் கல்லூரிப் பருவம். அப்படி மாட்டிக் கொண்ட சமயத்தில் சூப்பராகச் சமாளித்து, தப்பித்த அனுபவங்களை இங்கே சில கல்லூரி மாணவர்கள் சொல்கிறார்கள் (இங்கே இவை அரங்கேறுவதால் மறுபடி அவர்கள் மாட்டிக் கொள்ள வாய்ப்பிருக்கிறது. அதற்காக, அவர்களுக்கு முன்னதாகவே நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.)**



* ரமேஷ்

ரமேஷ் : பயங்கர ரெக்கமண்டேஷனோட அப்ப விவேகானந்தா காலேஜ்ல பி.காம் ஸீட் கிடைச்சிருந்தது. என்னை ரெக்கமண்ட் பண்ணியிருந்தவர் அந்த காலேஜ் புரொபசர் ஒருத்தர். எங்கப்பாவோட ஃப்ரெண்ட். ரொம்ப சாது, நல்ல பையன்னு என்னைப் பத்தி அவர் நினைச்சிட்டிருந்தார்.

காலேஜ் சேர்ந்து ஒரு வாரம் ஆகலை. மாஸ் கட். ஏழெட்டுப் பசங்க சேர்ந்து சினிமா கிளம்பிட்டோம். மௌண்ட் ரோடு தேவி. என்னவோ இங்கிலீஷ் படம். இன்டர்வெல்ல சிகரெட் வாங்கினோம். யார் கிட்டயும் வத்திப் பெட்டி இல்லை. நான் போய் ஒரு ஆள் தோளைத்தட்டி ''மேட்ச் பாக்ஸ் ப்ளீஸ்' அப்படீன்னேன். அவர் திரும்பிப் பார்த்தார். என் வாய்லேர்ந்த தம் கீழே விழுந்திடிச்சி. அதே ப்ரொபசர்!



பி. ஜி. சுப்ரமணியன் : கம்ப்யூட்டர் கோர்ஸ் படிச்சிட்டிருந்தேன். கிளாஸ்ல இருந்த பாய்ஸ், கேர்ல்ஸ் எல்லாரும் எங்கேயாவது பிக்னிக் போகலாம்னு தீர்மானம் பண்ணினோம். கோல்டன் பீச்.

அவர் அப்ப ஒன்னும் கண்டுக்கலை. குடுத்துட்டுப் போயிட்டார். மறுநாள் லஞ்ச் டயத்துல ஸ்டாஃப் ரூமுக்குக் கூப்பிட்டு அனுப்பினார்.

நான் நேரே போய், பொத்துன்னு அவர் கால்ல விழுந்துட்டேன். ''சார்! தப்பா எடுத்துக்காதீங்க சார்! அவசரப் பட்டு எந்த முடிவுக்கும் வந்துடாதீங்க! நேத்து தியேட்டர்ல நீங்க பார்த்த போது, நான் 'ராக்கிங்'ல மாட்டிட்டிருந்தேன் சார்! சீனியர்ஸ் நாலு பேர் பின்னாடி நின்னுக் கிட்டு இருந்தாங்க சார்! அவங்கதான் இந்த மாதிரி உங்கக்கிட்ட போய் பேசச் சொன்னாங்க சார்! ப்ளீஸ்... புரிஞ்சிக்கங்க சார்!''

ஸார் ரொம்பவும் உணர்ச்சி வசப்பட்டு விட்டார். ''நான் அப்பவே நினைச்சேன். என்னடா ரமேஷ் நல்ல பையனாச்சே அப்படீன்னு. ரைட், நீ போகலாம்!'' என்றார்

எம். கவிதா : எத்திராஜ் கல்லூரிக்குப் போக வசதியா இருக்கும்னு வீட்ல சத்தியாக்கிரகம் பண்ணி மொப்பட் வாங்கியிருந்த நேரம். ஃபிரெண்டோட ஜாலியா கிளம்பிட்டேன். செமை ஸ்பீடு. சைதாப்பேட்டை மார்க்கெட் தாண்டி, கலைஞர் வளைவுகிட்ட வந்துக்கிட்டிருந்த போது, போலீஸ்காரர் ஒருத்தர் பிடிச்சுட்டார். ஒன்வே. ''ஏம்மா! படிச்ச பொண்ணா இருக்கியே, ஒன்வேல வரக் கூடாதுன்னு தெரியாது?''

* கவிதா



''ஸாரி சார்!''

''என்ன ஸாரி? எடு! எடு! வண்டியை ஓரம் கட்டு!''

''இ வ ள் என் ஃபிரெண்டு சார்! மாடியிலேர்ந்து விழுந்துட்டா. கால் பிராக்சர் ஆ கி யி ரு க் கு ம் போலருக்கு. அதான் ஹா ஸ் பி ட லு க் குக் கூட்டிக்கிட்டுப் போறேன்... அவசரத்துல....''

வேறு வழியின்றி அவள் கா லை ப் பிடித்துக் கொண்டு முனக வேண்டியதாயிற்று.

அந்தப் போலீஸ்காரர், மேலும் கீழும் பார்த்து விட்டுப் பரிதாபப்பட்டார். ''சரி, சரி, போயிடு. இனிமே இப்படி வராதே!''

பேட்டி : கிச்சா



# மெரீனாவில் முதலமைச்சர்...

ஏதோ ஷூட்டிங் என்பதாக நினைத்துத் தான் ஆரம்பத்தில் டாட்டா காண்பித்துச் சென்றனர் மக்கள். உற்றுப் பார்த்த சிலருக்கு அதிர்ச்சி, தொடர்வதாக வியப்பு. பஸ்களை நிறுத்தி மக்கள் ஓடி வர ஆரம்பிக்க, முதல் சில மணி நேரங்களுக்கு ஸ்ரீபாய் தாவு தீர்த்திருக்கிறது!

அசுர வேகத்தில் பாதுகாப்பு வளையங்கள், குண்டு துளைக்காத ஸ்கிரீன், இன்ஸ்டண்ட் பந்தல், மேடை, கட்டில்-மெத்தை, ஏர்-கூலர், நின்று தாற்காலிகள், இவை மட்டுமல்ல; கம்ப்யூட்டர், ஃபாக்ஸ், ஃபோன் முதலிய பல வசதிகளுடன் முதலமைச்சர் காரியாலயமே மெரீனாவுக்கு வந்து விட்டது.

வீடு திரும்பத் தயங்கிய மந்திரிகள் புல் தரையில் உறங்கினார்கள்.

முதல்வரை ஜனங்கள் அருகில் நெருங்கத் தடை ஏதுமில்லை; தாய்க்குலத்துக்கு முதல் மரியாதை என்னும் போது அவரவரும் தத்தம் குறைகளை மனுக்களாக்கிக் கொண்டு வர ஆரம்பித்து விட்டனர்.

ஆங்காங்கே பீச்சில் கூடி நின்ற கும்பல்களிடையில் முக்கியமான கருத்தரங்கு : ''வீரப்பன் வந்தாரா இல்லையா?'' பெட் கட்டவும் பலர் தயாரானார்கள்.

ரஜினி, கமல், ஸ்ரீதேவி வருகையை முன்னதாக மக்கள் எதிர்பாராததால் அந்நடிகர்கள் தப்பித்தார்கள். ஆனால் பிரபு சற்றுத் தாமதமாக வர, அதற்குள் ரசிகர்கள் உஷாராகி அவரைக் கட்டிப் பிடித்து, கன்னத்தைக் கிள்ளி... பிய்த்து எடுத்து விட்டார்கள்.

மயிலாப்பூர், திருவல்லிக்கேணி, சேப்பாக்கம் ஏரியாவாசிகளுக்கு ஒரு கூடுதல் லாபம். நடுராத்திரி இரண்டு மணிக்கு விழித்திருந்து தண்ணீர் பிடிக்கும் அவலத்திலிருந்து தாற்காலிக விடுதலை! மெட்ரோ வாட்டர் டேங்கர்கள் நாலு திருவப்பட, சுற்றிலும் கலர்கலராக பிளாஸ்டிக் குடங்கள். 'அம்மா வாழ்க!'

- நிருபர்

படம் : டி. ராமமூர்த்தி



விளம்பரத் துறை எவ்வளவோ முன்னேறிவிட்டதாமே? இந்தத் தண்ணீர்ப் பஞ்சத்தில் ஏன் புகுந்து விளையாடவில்லை? இதோ 'டயார்' வழங்கும் சில சூப்பர் கிண்டலான யோசனைகள் :

●● தேவை : நல்ல ஆரோக்கியமும், பலசாலியுமான நபர் தேவை. தெருக் குழாயில் தண்ணீர் அடிக்கும் திறமையும், குழாயடிச் சண்டையில் தேர்ச்சி பெற்றவருக்கும் நல்ல ஊதியம் வழங்கப்படும். உடனே அணுகுக :

'சவலை'ச் சாமி,
'ஒல்லிபிச்சான்' தெரு,
'தண்ணீர்க்கலைஞ்சான்' பேட்டை.

●● 'சிறு துளி பெருவெள்ளம்' -
'குடும்பம் ஒன்றே - குடம் ஒன்றே'
'குளிப்பதை நிறுத்துங்கள்
- குஷியாக வாழுங்கள்'
'நீர் அற்ற வாழ்வே,
நிம்மதியான வாழ்வு'

'நீர்வளவன்'
தலைவர்,
'தண்ணீர் தட்டுப்பாடு வாரியம்'.

# விளம்பரம்:




●● மழையின்றி நீரில்லை. நீர் இல்லையேல் வாழ்வேது? மழை பொழிய 'இசை மழை' பொழிய வேண்டும். மழையின் கருணை வேண்டுமானால் 'அமிர்தவர்ஷணி' கங்காதர பாகவதரை இன்றே காணுங்கள். கச்சேரிக்கு (தேங்காய் மூடி கச்சேரியானாலும்) 'கன்செஷன்' உண்டு!

''ராகசித்தர்'' 'அமிர்த வர்ஷணி கங்காதரன்'
செட்டிகுளம்
- 'பாலை'யூர்
தந்தி : 'அமிர்தவர்ஷணி'.

# தண்ணீர் பட்டபாடு!

●● தண்ணீர்த் தட்டுப்பாடா? 'ஏழு கிணறு' இருக்க கவலை ஏன்? எங்கள் 'ஏழு கிணறு ஸ்டோர்ஸில்' ஏழு எவர்சில்வர் குடங்கள் வாங்குவோருக்கு 'ஒரு குடம் தண்ணீர்' இனாமாகத் தரப்படும். இந்தச் சலுகை இந்த வாரம் மட்டுமே!

'ஏழு கிணற்றுக்கு' இன்றே விஜயம் செய்யுங்கள்.

'ஏழு கிணறு' ஸ்டோர்ஸ்,
எவர்சில்வர் பாத்திரக் கடை,
'தண்ணீர்காஞ்சான்' தொட்டித் தெரு.

●● விற்பனையாகிறது! 'கூவத்தைக் குடிநீராக்கலாம் தம்பி!' 'அக்னி மூர்த்தி' எழுதிய அறிவியல் ஆராய்ச்சிப் புத்தகம். புத்தகத்தைத் தொட்டாலே 'வாசனை' மூக்கைத் துளைக்கும்! அரிய வாய்ப்பு! சொற்ப பிரதிகளே கைவசம் உள்ளன. பிரதிக்கு முந்துங்கள்!

'தண்ணிகாசலம்' பதிப்பகம்,
'ஏரிஅடைச்சான்' நகர்,
வண்டலாபுரம்.

●● விரைவில் வெளிவருகிறது! 'வருண ஸ்ரீ' - 'ஜலராஜ்' நடித்த 'தேவர் கிணறு'! கதை - வசனம் - டைரக்ஷன் : நீர் வளவன். பாடல்கள்: கவிஞர் தண்ணீர் தாசன். கேமரா - 'மேக'நாதன். இசை : 'காவேரி ராஜா'!

●● இந்த வாரம் 'கண்ணீர்' வாசித்தீர்களா? சிந்துஜா, நர்மதா ராமன், காவேரி குமாரன், பாகீரதி ஆகியோர் எழுதிய நெஞ்சை உருக்கும் 'உண்மை தண்ணீர்க் கதைகள்'. 'ஜலதல' பிரதாபன் எழுதும் 'நீர் மோகினி' சரித்திர தொடர் ஆரம்பம். 'தண்ணியடி நீ எனக்கு!' - கோதாவரியின் குறுநாவல். முன் பணத்திற்குப் பதிலாக தண்ணீர் 'சப்ளை' செய்யும் ஏஜெண்டுகள் தேவை!

கண்ணீர் காரியாலயம்
வானம் பார்த்தான் வீதி,
கிருஷ்ணாபுரம்.

# படிக்காத குழந்தையா? மேதையாக இருக்கலாம்!

''டாக்டர், இவன் எங்க ஒரே மகன்... கொஞ்ச நாளா நிமிர்னு ஒழுங்காப் படிக்கறதில்லை; வெறும் அம்பது பர்சென்ட்தான் மார்க் வாங்குறான். கிளாஸ்ல கவனிக்கறதேயில்லைன்னு டீச்சர் புகார் எழுதி அனுப்பியிருக்காங்க... இவன் எப்படியாவது நல்லா படிக்க எங்களைப் போலவே பெரிய வக்கீலா வரணும்னு நினைச்சிட்டிருந்த நேரத்துல இப்படி பிரச்னை....''

- பெற்றோர் அழாத குறையாக மனோதத்துவ நிபுணரிடம் முறையிடுகிறார்கள். டாக்டரும் அச் சிறுவனின் I.Q. -வைப் பரிசோதிக்கிறார். அவன் வயதுக் குழந்தைகள் IQ பரிசோதனையில் சராசரியாக 95 & 115 புள்ளிகள் வரை பெறுவார்கள். ஆனால் இந்தச் சிறுவனோ 160 புள்ளிகள் பெறுகிறான்! டாக்டர் பெற்றோரிடம் தனியே பேசுகிறார்.

''உங்கள் மகன் ஒரு சூப்பர் இன்டலிஜன்ட் குழந்தை....''

''என்ன?! அவன் பரீட்சை பேப்பர் முழுதும் சிவப்பு மையால் ஆசிரியர் கண்டன வாசகங்கள் எழுதுகிறாரே... இவனா சூப்பர்?''

''ஆமாம்! ஆமாம்! இவன் அதிபுத்திசாலித்தனம் உங்களுக்கும் ஆசிரியர்களுக்கும் புரியாமல் போனதுதான் பிரச்னை...''

''........''

''ஐந்தாம் வகுப்பு படிக்கும் உங்கள் மகனுக்கு அவ்வகுப்புப் பாடங்கள் எல்லாமே ரொம்ப எளிமை.... அதனால் அவற்றில் அவனுக்கு ஆர்வமே ஏற்படுவதில்லை; ஆசிரியர் கற்றுத் தருவதற்கும் அதிகமாக அவனே படித்துத் தெரிந்து வைத்திருக்கிறான். சவால்களோ புதிய தகவல்களோ இல்லாத பரீட்சைகளும் வகுப்புகளும் அவனுக்குச் சலிப்பூட்டுகின்றன.... அதனால் அவன் கவனம் சிதறுகிறது. வேறு சவால்களைத் தேடுகிறது.... விடைகள் தெரிந்தாலும் பரீட்சையில் எழுதப் பிடிக்கவில்லை. அவனுக்கு எல்லாமே பெரிய 'போர்' ஆக இருக்கிறது! அதனால்தான் நீங்கள் கவலைப்படும்படி மார்க் குறைகிறது....''

''நம்ப முடியவில்லையே டாக்டர்!''

''உங்கள் மகன் சிறு வயது முதலே அளவுக்கு அதிகமாக எதிர்த்துப் பேசி, கேள்வி கேட்டிருப்பானே?''

''ஆமாம் டாக்டர்.''

''பள்ளியில் 'அதிகப்பிரசங்கி' என்று டீச்சரிடம் பட்டம் வாங்கியிருப்பானே....''

''ஆமாம்! ஆமாம்!''

''நீங்கள் என்ன சொல்வது; நான் என்ன கேட்பது? என்ற ரீதியில் துணிந்து தவறாக நடந்து கொள்கிறானோ...?''





''இப்போது சமீபகாலமாக அதே வழக்கமாகிப் போச்சு....''

''அவன் நடத்தை அடியோடு மாறி, கெட்டுப் போய் விடுவானோன்னு இப்ப உங்களுக்குக் கவலை....''

''ஐயோ! எவ்வளவு சரியாகச் சொல் றீங்க டாக்டர்....''

''அழவேண்டாம் அம்மா! இந்தப் 'பிரச் னை'கள் எல்லாமே உங்கள் மகன் சூப்பர் இன்டலிஜன்ட் என்பதற்கான அடையாளங் கள்தான். இத்தகைய குழந்தைகள் வயதுக்கு மீறிப் பேசுவார்கள்; ஒத்த வயதுக் குழந் தைகளோடு விளையாடாமல் பெரிய வயதுக் குழந்தைகளோடு பழகுவார்கள்; இவர்களுடைய மன குறுகுறுப்புக்கு வடி கால் கிடைக்காவிட்டால் ஆபத்தான விஷ யங்களைச் சவால்களாக ஏற்றுச் செய்யவும், மரபுகளையும் சமூக விதிகளையும் மீறி நடக்கவும் ஆரம்பிப்பார்கள். ஆனால் சரி யான சமயத்தில் இவர்களை அடையாளம் கண்டு விட்டால் பிரச்னை இருக்காது. இவர் கள் பெரும்பாலும் ரொம்ப 'creative' ஆக இருப்பார்கள் - அதாவது அறிவையும் கற் பனையையும் - பல சமயங்களில் கைத்திற னையும் - இணைத்துச் செயல்படக் கூடிய வர்களாக இருப்பார்கள். உங்கள் குழந்தை யின் சிறப்புத் திறமையும் ஆர்வமும் எது என்று கண்டு பிடித்து, அந்தத் துறையில் அவனுக்கு வாய்ப்பையும் வசதிகளையும் ஏற்படுத்தித் தரலாம்...''

''எப்படி டாக்டர்....?''

''உதாரணமாக - ஒரு பையனுக்கு அதீத கற்பனையுடன் விஞ்ஞான ஆர்வமும் கைத் திறனும் இருந்தது. அவன் அம்மா ஒவ் வொரு வருடமும் நவராத்திரி கொலு வைப் பதை அவன் பொறுப்பாக்கினாள். அவர்கள் வீட்டுக் கொலுவில் மண் பொம்மை, மணல் பரப்பி பிளாஸ்டிக் பார்க் என்றெல்லாம் வழக்கமான விஷயங்கள் இருக்காது. இந்த வருடம் 'சோலார் எனர்ஜி' என்று ஒரு தலைப்பு தேர்ந்தெடுத்து அதற்கேற்ப பொம் மைகள் விளக்கக் காட்சிகள் செய்து அமைப் பான்; அடுத்த வருடம் வேறொன்று - இப் படியே ஒவ்வொரு வருஷமும்.... இன்று அவன் ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் உபகாரச் சம்பளம் பெற்று படித்துக் கொண் டிருக்கிறான்!''

''அமெரிக்காவைச் சொல்றீங்கள். இது மாதிரி சூப்பர் இன்டலிஜன்ட் குழந்தை களுக்கு அங்கே உள்ள வசதி....''

''இங்கேயும் வரத்தான் வேணும். அது வரைக்கும் உங்களை மாதிரி பெற்றோர்கள் குழந்தைகளின் அசாதாரண திறமைகளை அடையாளம் தெரிந்துகொண்டு ஆசிரியர் கள், மனோதத்துவ நிபுணர்களின் உதவி யோட அந்தக் குழந்தைகளைச் சிறப்பாக உருவாக்கலாம்.''

- டாக்டர் லக்ஷ்மி விஜயகுமார் அளித்த தகவல்களின் அடிப்படையில்...

தொகுப்பு : எஸ்.ஆர்.



பகடையாட்டமா?
பாதுகாப்பா?

# உங்கள் சேமிப்பை எங்கே டெபாசிட் செய்யப் போகிறீர்கள்?

## பங்கு மார்க்கெட்டில் பயன்படுத்தும் ஒரு நிதி நிறுவனத்திலா?

## அல்லது

## லாரிகளுக்கு நிதியுதவி செய்து வெற்றிகரமாக இயங்கும் ஒரு நிதி நிறுவனத்திலா?

**சி**ல நிதி நிறுவனங்கள் உங்கள் டெபாசிட் தொகையைப் பங்கு மார்க்கெட்டில் பயன்படுத்துகின்றன. ஆனால் இதில் அவை வெற்றி பெறுகின்றனவா என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியாது. காரணம் பங்கு மார்க்கெட் நிலையாக இருப்பதில்லை.

ஸ்ரீராம் நிறுவனங்கள் அப்படியல்ல. அவை நிலையான தொழிலான லாரிகளுக்கு மட்டுமே நிதியுதவி அளிக்கின்றன.

- லாரி போக்குவரத்துத் தொழில் ரொக்க அடிப்படையில் நடைபெறுகிறது.
- அதில் கிடைக்கும் வருமானம் லாரியின் பராமரிப்புக்கும், அதன் உரிமையாளரின் தேவைக்கும் போதுமானதாக இருக்கிறது.
- அதனால் லாரி உரிமையாளர் வாங்கிய கடனைக் குறிப்பிட்ட தவணைகளில் திருப்பிச் செலுத்தி விடுகிறார்.

20 ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவம் பெற்றுள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள் கொடுத்த கடனைத் திருப்ப வசூலிப்பதில் 100% வெற்றியைப் பெற்று வருகின்றன.

இந்நிறுவனங்கள் தொடர்ந்து 25% டிவிடெண்ட் அளித்து வருகின்றன.

ஸ்ரீராம் நிறுவனங்களின் டெபாசிட்தாரர்களின் எண்ணிக்கை 1,50,000. அவர்கள் எவரிடமும் கேட்டுப் பாருங்கள். அவர்களுடைய தேர்வு ஸ்ரீராம் நிறுவனங்களாகத்தான் இருக்கும்.

உங்கள் தேர்வு?




**ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்**
**ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்**
**ஸ்ரீராம்-சிடி யூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்**

மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், மூன்றாவது மாடி,
4, லேடி தேசிகாச்சாரி ரோடு, மயிலாப்பூர்,
சென்னை - 600 004.
போன்: 74960/77463/73768/76804/73456.



ADWAVE/SGC/4585 A

மாம, என்னத்த காரணம் கண்டுபிடிச்சு...
என்னத்த உண்ணாவிரதம் இருந்து...
என்னத்த இமேஜை வளர்த்து...
என்னத்த தேர்தல்ல ஜெயிச்சு...
...

எங்கள் புரட்சித் தலைவி உண்ணாவிரதம். மாபெரும் வெற்றி!

அ.தி.மு.க வெற்றி விழா

எங்கள் பிரதமரின் தூதர் சக்கரவர்த்தி முயற்சி, மாபெரும் வெற்றி!

இ.காங் வெற்றி விழா

ஆமாமாம்... உங்களுக்கெல்லாம் வெற்றிதான், ஜனங்களுக்குத்தான் அவதி!

ஒரு கை குடுப்பா... இதைத் தாண்டி வந்திடறேன் ...

ஒரு கோடி ஊழல்

நம்பிக்கையில்லாத் தீர்மானம்

ஐயய்ய... ஒரே அழுக்கு, செல்ல கையக் கழுவிட்டு வாங்க...

அஜித் சிங்




ஸ்ரீ

கல்கி





1993
ஆகஸ்ட் 1
மலர் : 52
இதழ் : 1
ஸ்ரீமுக
ஆடி 16


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# சுக்லாவின் வெற்றி!

மிகுந்த நல்லெண்ணத்தோடும் வீரியத்தோடும் ஆரம்பமான தமிழக முதல்வரின் உண்ணாவிரதம், சுக்லாவின் வெற்றியாக முடிந்து போனதுதான் பரிதாபம். இந்த உண்ணாவிரதத்தால் சரிந்து கொண்டிருந்த ஜெயலலிதாவின் அரசியல் இமேஜ் அவருடைய கட்அவுட் உயரத்துக்கு மறுபடி மக்களிடையே வளர்ந்து விட்டிருப்பது உண்மையாயினும் அவர் மேற்கொண்ட முயற்சி தோல்வியே கண்டிருக்கிறது. சுக்லாதான் அதி சாமர்த்தியமாகவும் தந்திரமாகவும் 'ஜெ'யின் உண்ணாவிரதத்தை முறிப்பதில் வெற்றி பெற்று விட்டிருக்கிறார்.

'நடுவர் மன்றத்தின் இடைக்காலத் தீர்ப்பை அமுல்படுத்தக் குழு அமைப்போம், காவிரி நீரின் அளவைக் கண்காணிக்கவும் குழு அமைப்போம்' என்றெல்லாம் ஏதோ கண்துடைப்பாகக் கூறிய கையோடு விமானமேறிப் பறந்து விட்டார். அந்த விமானம் டில்லி சென்றடையுமுன்னரே மொய்லி அரசு அவருடைய யோசனைகளை ஏற்க முடியாது என்று திட்டவட்டமாக அறிவித்து விட்டது! ஆக மொத்தம் நிலைமை, உண்ணாவிரதத்துக்கு முன்பிருந்த அதே நிலைமைதான். ஒரு மில்லி மீட்டர் முன்னேற்றமும் இல்லை.

ஆடி மாதம் பாசனத்துக்குக் காவிரியில் நீர் தேவை என்பதும் கோடையில் குடிநீர் தட்டுப்பாடு - குறிப்பாகத் தமிழகத் தலைநகரில் - கடுமையாக ஏற்படும் என்பதும் எல்லோரும் அறிந்ததே. ஆனால் ஆட்சியாளர்கள் பிரச்னைகள் தோன்றிய பிறகுதான் நிமிர்ந்து உட்காருகிறார்களே தவிர, முன்கூட்டியே யோசிப்பதில்லை. 'காவிரி நீர் பிரச்னையில் பலமுறை பேசியும் எழுதியும் பார்த்தாகி விட்டது; மைய அரசு அலட்சியப்படுத்தியது; அதனால்தான் உண்ணாவிரதம் என்ற பிரும்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க நேர்ந்தது' என்று 'ஜெ' சொல்லியிருக்கிறார். ஆனால் இப்போது அவர் காட்டிய தீவிரத்தைச் சில காலம் முன்பே காட்டியிருந்தால் அவர் பிரும்மாஸ்திரத்தைப் பிரயோகிக்கவும் நேர்ந்திராது; அது நமுத்துப் போன பட்டாசாகியும் இராது.

பருவ மழை பொய்க்கவில்லை எனில் பிரச்னையே இல்லை. காவிரியில் தண்ணீர் குறைவின்றிப் பெருகும். பருவ மழை ஏமாற்றி விடும் போது, கர்நாடகத்துக்கே நீர், தேவைக்குக் கம்மியாக இருக்கும் போது தமிழகத்துக்கு எப்படி தண்ணீர் விடுவது என்பதில்தான் பிரச்னை. 'நான் கர்நாடக விவசாயிகளின் நலனைக் கருத்தில் கொண்டுதான் செயல்பட முடியும்' என்கிறார் மொய்லி. 'தஞ்சையில் விளைச்சல் பாதிக்கப்படக் கூடாது என்றால், கர்நாடகத்தில் பாதிக்கப்படலாமா?' என்று வினவுகிறார். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இந்த வாதத்தில் நியாயம் உண்டு. ஆனால் இவர்கள் மறந்து விட்ட, அல்லது மறந்து விட்டது போல் நடிக்கிற விஷயம் riparian rights எனப்படும் சர்வதேசச் சட்டம்.

ஐரோப்பாவில் ஒரே ஆறு பல்வேறு நாடுகளினூடே பாய்ந்து செல்லும். மேல் மட்டத்தில் இருக்கும் எந்த ஒரு நாடும் கீழ் மட்டத்தில் விவசாயிகள் இன்று வரை அனுபவித்து வந்துள்ள உரிமைகளைப் பாதிக்கும் வகையில் அணைகள் கட்ட முடியாது; தண்ணீர் தர மாட்டேன் என்று கூறவும் முடியாது. இத்தகைய உரிமை தமிழகத்துக்கும் உண்டு. கர்நாடகத்தில் அணை என்பதற்கு அர்த்தம் புரியுமுன்னரே இங்கு கல்லணை கட்டி, கால்வாய்கள் அமைத்துப் பயிர்ப் பாசனம் நடத்தியிருக்கிறான் தமிழன். அந்த உரிமையை யாரும் பறிக்க முடியாது. இதைக் கருத்தில் கொண்டுதான் குறைந்தபட்சம் இத்தனை டி.எம்.ஸி. தண்ணீர் தமிழகத்துக்குத் தந்தாக வேண்டும் என்று நடுவர் மன்றம் இடைக்காலத் தீர்ப்பு அளித்தது. உச்சநீதி மன்றமும் உறுதி செய்தது.

சட்டத்தின் ஆட்சி நடக்க வேண்டியதன் அவசியத்தையும் தமிழகத்தின் உரிமைகள் மதிக்கப்பட வேண்டியதன் நியாயத்தையும் மத்தியத் தலைவர்கள் கர்நாடக மாநில அரசுக்கும் மக்களுக்கும் விளக்கிக் கூறி, அவர்களின் சம்மதத்தையும் ஆதரவையும் பெற வேண்டும். இதுதான் நிரந்தரத் தீர்வுக்கு வழி. இப்போதைக்கு உண்ணாவிரத நெருக்கடியைச் சமாளித்து விட்டதற்காக சுக்லா பெருமூச்சு விடலாம்; ஆனால் அது நிம்மதிப் பெருமூச்சாக இருக்க வாய்ப்பில்லை. தமிழகத்தின் அனல் மூச்சை அவர் இன்றில்லாவிட்டால் நாளை சந்திக்கத்தான் நேரும்.

## வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும்
## இலட்சிய மலிவு விலைப் பதிப்பு!

இன்று தமிழ்ப் புத்தக உலகில் விற்பனையில் முன்னணியில் இருப்பவை திருக்குறளும், பாரதியார் பாடல்களும் தான்! இந்த முதல் வரிசை விற்பனையில் சிலப்பதிகாரத்தையும் சேர்க்க வேண்டும் என்பதே எங்கள் இலட்சியம்!

என்னிடம் அந்த உரை இருக்கிறது, இந்த உரை இருக்கிறது என்று பேசுவதில் பயனில்லை! அவ்வுரைகளின் துணை கொண்டு சிலப்பதிகாரத்தை ஒரு முறையாவது யாராவது படித்திருக்கிறார்களா? காப்பியத்தின்மீது முழுப் பார்வை செலுத்தியதுண்டா? இதோ எங்கள் பதிப்பினைப் பாருங்கள்! ஒரு பக்கம் பாடல் வரிகள் - எதிர்ப்பக்கம் உரை (நடை)! ஒரு நாவல் படிப்பது போல மூன்று காண்டங்களையும் மூன்று நாட்களில் படித்து முடிக்கலாம்! இதில் அமைந்துள்ள கானல் வரி, ஆய்ச்சியர் குரவை, வேட்டுவ வரி, குன்றக் குரவை - இவற்றிற்கு இணையாக எந்தக் காப்பியத்தில் எந்தப் பகுதியைக் காட்டமுடியும்? தெரியாமலா சொன்னார் பாரதியார், 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்' என்று! பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரனின் உரையுடன் கூடிய,

# சிலப்பதிகாரம்

(ஒரு பக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
(பக்கம் 580. விலை ரூ. 30.00)

எமது மற்றொரு வெளியீடான மதுரை இளங்குமரனின் உரையுடன் கூடிய

# திருக்குறள்

(மூலமும் உரையும்)
(பக்கம் 347. விலை ரூ. 15.00)

இரண்டும் வேண்டுவோர் ரூ.45 M.O. (அ) D.D. மூலம் அனுப்புக. நூல்களை உடனே அனுப்புகிறோம். தபால் செலவினைத் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

பணம் அனுப்ப வேண்டிய முகவரி
**VARTHAMANAN PATHIPPAGAM,**
**ARR Complex,**
**141, Usman Road,**
**T. Nagar, Madras - 600 017.**
**(Near Panagal Park)**
**Ph. 825 7995.**

* நடுவர் குழு பரிசீலனை செய்த போது....

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1993 முடிவுகள்...

தென்கச்சி கோ. சுவாமிநாதன், ஜெயபாரதன், சுபா (சுரேஷ்-பாலகிருஷ்ணன்) மற்றும் கல்கி நிர்வாக ஆசிரியர் கி. ராஜேந்திரன் ஆகியோர் அடங்கிய நடுவர் குழு, ஜூலை 11 - ம் தேதியன்று கூடி, பின்வரும் கதைகளைப் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுத்தது :

**முதல் பரிசு : ரூ. 1,500**

*"ஒரு குடும்ப அட்டையைத் தேடாதீர்கள்"*

எழுதியவர் : வே. குருநாதன் (அறிமுக எழுத்தாளர்), ஆ. வட்டகம்பிபுரம், TNC ஆலங்குளம் - 626 127.

**இரண்டாம் பரிசு ரூ. 1,000**

*"ஞானத் தீ"*

எழுதியவர் : தேவகாந்தன், 9, ஆத்ரேயபுரம் மெயின் ரோடு, சூளைமேடு, சென்னை - 600 094.

**மூன்றாம் பரிசு ரூ. 1,000**

**(இரு கதைகளுக்குத் தலா ரூ. 500/- வீதம்)**

1. *"ச(ர)த்தியம்"*

எழுதியவர் : "பூர்ணகுமார்" (ச. ஞானசம்பந்தன் - அறிமுக எழுத்தாளர்), அறிவிப்பாளர், A-2 டைப் - 3, ஜூனியர் குடியிருப்பு, அகில இந்திய வானொலி, மதுரை - 625 002.

2. *"என்று தணியும்?"*

எழுதியவர் : ப. ரவிகுமார் (அறிமுக எழுத்தாளர்), 23, தெற்கு வீதி, திருத்துறைப்பூண்டி - 614 713.

பரிசு பெற்றவர்களுக்கு நமது வாழ்த்துக்கள்.

பிரசுரத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளின் விவரம் அடுத்த இதழில் வெளியாகும்.

போட்டியில் கலந்து கொண்டு சிறப்புச் சேர்த்த ஆயிரக்கணக்கான எழுத்தாளர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

- ஆசிரியர்



* தென்கச்சி கோ. சுவாமிநாதன்



* சுரேஷ் (சுபா)



* ஜெயபாரதன்



* பாலகிருஷ்ணன் (சுபா)

# போலீஸார் எழுதிய உண்மைக் கதை!

**நம்ம ஊர் சூப்பர் பங்கு மார்க்கெட் ஊழல், போஃபர்ஸ், நகர்வாலா கேஸ் போன்றவையெல்லாம் இருக்கட்டும்; அமெரிக்காவிலேயே 1974-ல் நடந்த ஒரு வங்கிக் கொள்ளையில் சம்பந்தப்பட்டவர்களை இன்றுவரை பிடிக்க முடியவில்லை!**

அவர்கள் கொள்ளையடிக்கத் திட்டமிட்டிருந்த வங்கிக் கிளை அப்படியொன்றும் பெரிதில்லை. ஆனால் வாஷிங்டன் மாநிலத்தின் உட்லாண்ட்ஸ் பகுதியில் மறுநாள் சம்பள தினம் என்பதால் வங்கியில் பட்டுவாடாவுக்காக நிறைய பணம் கொண்டு வந்து வைத்திருப்பார்கள் என்பது அவர்களுக்குத் தெரியும்.

அவர்கள் மூன்று பேர். ''பாங்க் ஆஃப் வெஸ்ட்''டின் அந்தக் கிளைக்கு ஒரு வேனில் வந்தனர். இரவு மணி பத்தரை. துணை மானேஜர் தம் வேலையை முடித்து விட்டுப் பூட்டிக் கொண்டு புறப்படக் காத்திருந்தனர். ஒரு தடவைக்கு இரு தடவையாக சரியாகப் பூட்டியிருப்பதை உறுதி செய்து கொண்டு புறப்பட்டவர், சாலை ஓரம் நிழலில் நின்றிருந்த அந்த வேனைக் கவனிக்கவில்லை. ஒருவேளை கண் பார்த்திருந்தாலும் அது மனத்தில் ஒரு பாதிப்பை ஏற்படுத்தவில்லை. காரைச் செலுத்திக் கொண்டு வீடு நோக்கிப் போய் விட்டார். சுற்று வட்டாரம் வெறிச்சோடியது.

பாங்க் கட்டடத்தின் பின்புறம் வாகனத்தைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள். அதன் உள்ளே ஏற்கெனவே திட்டமிட்டிருந்தபடி பல உபகரணங்கள் இருந்தன. வேனிலிருந்து இறங்கிய ஒருவன் பின்புறக் கதவு ஒன்றை இலேசான ஆயுதம் கொண்டு நெம்பித் திறந்தான். சுலபமாகத் திறந்து கொண்டது. தட்டுமுட்டுச் சாமான்கள் போட்டு வைக்கும் அறைதானே! உள்ளே சென்று, மறுபுறத்துச் சுவரில் இருந்த இன்னொரு கதவையும் சற்று சிரமப்பட்டு நெம்பித் திறக்க... வழி கிடைத்து விட்டது.

'சிக்னல்' உணர்ந்ததும் மற்ற இருவரும் வாகனத்திலிருந்து உபகரணங்களை இறக்கி எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்து கொண்டார்கள். திறக்கப்பட்ட கதவு வழியே போய் படியேறி முதல் மாடியை அடைந்தவர். அங்குதான் வங்கிக் கிளை இயங்குகிறது. தட்டுமுட்டுச் சாமான்கள் போட்டு வைக்கும் அறையிலிருந்து எடுத்து வரப்பட்ட ஏணியை சுவரில் சாய்த்து ஏறி, அபாய அறிவிப்பு மணியை டார்ச் விளக்கின் ஒளியில் ஆராய்ந்தான் ஒருவன். தன் பாக்கெட்டிலிருந்து ஒரு டியூபை எடுத்து மணியின் கிண்ணப் பகுதியில் பிதுக்க, அந்தப் பிரத்தியேகக் குணமுடைய கோந்து உடன் உலர்ந்து, மணியின் கிண்ணப் பகுதியை இறுக்கமாக நிறைத்தது.

அடுத்து மணியின் மின் தொடர்பு ஒயரைத் துண்டித்தான். கோந்து பயன்படுத்தியிராவிட்டால் மின் தொடர்பு துண்டிப்பு முயற்சி தொடங்கும்போதே மணி ஒலித்து ஊரைக் கூட்டுவதுடன் போலீஸ் நிலையத்துக்கும் சிக்னல் போயிருக்கும். டெலிஃபோன்களும் துண்டிக்கப்பட்டன.

மூவரும் இரண்டாவது மாடிக்கு ஏறிச் சென்றனர். முதல் மாடியில் வங்கியின் பாதுகாப்புப் பெட்டக அறை அமைந்துள்ள இடத்துக்கு நேர் மேலே போய் நின்று கொண்டு தங்கள் வேலையை ஆரம்பித்தனர்.

காங்கிரீட் கூரையில் துளை போடும் கருவிக்கு மின் இணைப்பு தரப்பட்டது. அது



இயங்கும் போது ஏற்படும் உராய்வு காரணமாகச் சூடேறி விடும். எனவே குளிரச் செய்ய ''ஹோஸ் பைப்'' ஒன்றைத் தண்ணீர்க் குழாயுடன் இணைத்து உராய்வுப் பகுதியில் நீர் விழுந்து கொண்டே இருக்கச் செய்தார்கள்.

''உர்ர்ர்ரெய்ங்ங்...'' துளை போடும் கருவி இயங்கி, காங்கிரீட் தளத்தில் ஓர் ஆள்



இறங்கத் தக்க அளவில் ஓட்டை போட, சிறிது நேரத்தில் வட்டத் தட்டாக காங்கிரீட் தடாரென்று கீழே விழுந்தது.

மூவரில் ஒல்லியான ஆசாமி கயிறு கட்டி கீழே மெதுவாக இறக்கப்பட்டான். அவனைத் தொடர்ந்து ''ஆக்ஸி-அஸிடலின் புளோ டார்ச்'' உபகரணங்களும் இறக்கப்பட்டன. அவனைச் சுற்றி அடுக்கடுக்காய் லாக்கர்கள். ஒரு பக்கத்தில் பெரிதாக வங்கியின் தனி பாதுகாப்புப் பெட்டகம். அறையினுள் ஒரே புழுக்கம்; மூச்சுத் திணறியது. பொருட்படுத்தாமல் அசிடிலின் டார்ச்சைப் பற்றவைத்தான். பளீரென எரியத் தொடங்கியது; தன் பணியைச் செய்ய ஆரம்பித்தது. 2000 சென்டிகிரேட் உஷ்ணம். அடைபட்ட அறையில் சூடு தகித்தது. பல்லைக் கடித்துக் கொண்டு காரியத்தில் கண்ணானான்.

பதினாறாவது நிமிஷம் 'கிளிங்' என்ற பெருத்த உலோக ஓசையுடன் பெட்டகத்தில் வெட்டப்பட்ட இரும்புத் துண்டு கீழே விழ அந்தச் சப்தம் இன்பத் தேனாக மூவர் காதிலும் ஒலித்தது. ''சீக்கிரம், சீக்கிரம்'' என்று மேலே இருந்தவர்கள் அவசரப் படுத்தினார்கள். ஆனால் சூடு காரணமாக பெட்டகத்தைத் தொட முடியவில்லை.



உள்ளே கட்டுக் கட்டாகக் கரன்ஸி. ஒரு உத்தேச மதிப்பாக மூன்றரை லட்சம் டாலருக்குக் குறையாது என்று அவர்கள் கணக்குப் போட்டிருந்தார்கள். எதிர்பாராத போனஸ்ஸாக ஏகப்பட்ட டிராவலர்ஸ் செக்குகள் வேறு தென்பட்டன.

**சா**க்குப் பைகளில் அவசர அவசரமாக எடுத்துப் போட்டு நிரப்பினான். கயிறு போட்டுக் கட்டினான். கயிறை அசைத்தான். மேலே இருந்து இழுக்க,.... என்ன துரதிர்ஷ்டம் ஓட்டைக்குள் சாக்குப் பை நுழையவில்லை! தங்கள் கணக்கு பிசகிப் போனதை உணர்ந்தார்கள். ''ஓட்டையைப் பெரிசாக்கு! சீக்கிரம்'' என்றான் கீழே இருந்தவன்.

''அதற்கு ரொம்ப நேரமாகும்; உன்னிடம் உள்ள புளோ டார்ச்சைப் பயன்படுத்தி பாதுகாப்பு அறையின் இரும்புக் கதவில் ஓட்டை போடு'' என்றனர் மேலே இருந்தவர்கள்.

''ஏற்கெனவே இங்கே நரகத் தீயை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்!''

''வேறு வழி இல்லை; சீக்கிரம்.''

வேறு வழியில்லை என்பதைக் கீழே இருந்தவனும் உணர்ந்தான். சோர்வை ஒதுக்கி வேலை செய்ய ஆரம்பித்தான். தீப்பொறி பறந்தது. மேலே இருந்து சகாக்களின் உற்சாக ஊக்குவிப்பு தொடர்ந்தது: ''இதோ ஆச்சு! முடிச்சுடலாம்! மூணரை லட்சம்! வாழ்நாளுக்குக் கவலை இல்லை! ராஜ போக வாழ்க்கை!''

புகை, சூடு, தீப்பொறிகள் இத்தனையையும் மீறி தப்பி விட வேண்டும் என்ற வெறி செயல்பட்டது. பணத்தாசை பலம் தந்தது. கதவின் பூட்டு இருந்த பகுதியை முழுமையாக வெட்டி கீழே விழச் செய்தான். வெளியே இருந்து இருவர் இழுக்க, உள்ளே இருந்து இவன் தள்ள, கதவு திறந்து கொண்டது. ஆளுக்கு ஒரு சாக்கு மூட்டை மட்டுமின்றி, கொண்டு வந்த உபகரணங்களையும் சர்வசாதாரணமாகத் திரட்டி எடுத்துக் கொண்டார்கள். வேனில் ஏறினார்கள். பறந்தார்கள்!

**ம**றுநாள் காலை. போலீஸ் வந்தது. நாளிதழ்களில் செய்தி வந்தது. ஆனால் போன பணம் இன்று வரை திரும்பி வரவில்லை! தடயங்களை வைத்து, 'வங்கி இந்த விதமாகத்தான் கொள்ளையடிக்கப் பட்டிருக்க வேண்டும்' என்று போலீஸ் தீர்மானித்து உண்மைக் கதை எழுதியதே தவிர, குற்றவாளிகள் யார் என்பதைக் கண்டு பிடிக்கவுமில்லை; இந்நாள் வரை யாரையும் இது தொடர்பாகக் கைது செய்யவுமில்லை!

– எஸ். சந்திரமௌலி

ஆதாரம் : World Famous Bank Robberies and Forgeries.



# சூப்பர்மேனின் சுவையான கதை!

சூப்பர்மேன் என்ற பெயரைத் தம்முடைய 'Man and Superman' என்கிற நாடகத்தின் மூலமாகப் பிரபலமாக்கியவர் ஜார்ஜ் பெர்னாட் ஷா. இது 1903ல். பின்னாட்களில் சூப்பர்மேன் என்கிற வீர சாகச கதாநாயகன் உருவாகி, உலகெங்குமுள்ள கோடிக்கணக்கான சிறுவர், சிறுமியர்களின் சூப்பர் ஹீரோவாய் விளங்கப் போகிறான் என்பது அப்போது அவருக்குத் தெரியாது!

1933-ம் வருஷம். ஜெர்ரி சீகல் என்கிற டீன் ஏஜ் பையன் ரொம்பவும் வெறுப்படைந்து போயிருந்தான். 'ஏதாவது செய்து மக்கள் கவனத்தைக் கவர வேண்டும்' என்று தீவிரமாகச் சிந்தித்தான். வீர சாகசங்கள் புரிந்து, பிரபலமாவதற்குத் தன்னிடம் என்னென்ன சக்திகள் எல்லாம் இல்லையோ, அந்த சக்திகளையெல்லாம் ஒரு மனிதனுக்குக் கற்பனையில் இவன் அளித்து, ஓர் அதிசயமான கதாபாத்திரத்தை உருவாக்கினான். அவனுக்கேற்றபடி ஒரு கதையையும் சிருஷ்டித்தான்.

மறுநாள் தன் நெருங்கிய சகாவான ஜோ ஷுஸ்டரிடம் கதையைச் சொன்ன போது, சித்திரம் வரைவதில் கைதேர்ந்த ஜோ, ஜெர்ரியின் கதைக்குச் சித்திரங்களை வரைந்து கொடுத்தான். அசாதாரண சக்தி கொண்ட மனிதனை ஹீரோவாய்க் கொண்ட படக்கதை (ஆங்கிலத்தில் இதை காமிக் ஸ்டிரிப் என்கிறார்கள்) அப்போது தான் உருவாயிற்று. இவ்வுலகில் சூப்பர் ஹீரோவான சூப்பர்மேனும் சுபஜனனம் ஆனான்.

ஐந்தாண்டுகள் கழிந்து, ஜெர்ரியும், ஜோவும் தங்களுடைய சூப்பர்மேன் படக் கதைகளை ஆக்ஷன் காமிக்ஸ் நிறுவனத்துக்கு 130 டாலருக்கு விற்று விட, 1938 ஜூன் மாதம் சூப்பர்மேனைக் கதாநாயகனாகக் கொண்ட முதல் காமிக் புத்தகம் வெளிவந்தது. அடுத்த ஆண்டு, ஜனவரியில் நாளிதழ்களிலும் சூப்பர்மேனின் சாகசக் கதைகள் இடம்பெறத் தொடங்கின.

சூப்பர்மேன் குழந்தைகளை மட்டுமின்றி, வயது வந்தவர்களையும் மிகவும் கவர்ந்தான். நாளடைவில் சூப்பர்மேன், காமிக்ஸ் நாயகனாக மட்டுமின்றி, ரேடியோ நிகழ்ச்சிகள், கார்ட்டூன் திரைப்படங்கள், நாவல்கள், நாடகங்கள், டெலிவிஷன் தொடர்கள், சினிமா என்று பல சாதனங்கள் மூலமாகவும் பிரபலமானான்.

சூப்பர்மேனின் கதை சுவாரசியமானது. கிரிப்டான் என்கிற கிரகத்திலிருந்து, அவனுடைய பெற்றோரால், பூமிக்கு ஒரு குழந்தை அனுப்பப்படுகிறது. மார்தா - ஜனாதன் தம்பதி அந்தக் குழந்தைக்கு கிளார்க் கெண்ட் என்று பெயரிட்டு, வளர்த்து ஆளாக்குகிறார்கள். டெய்லி பிளானட் என்கிற பத்திரிகையில் நிருபராகப் பணிபுரிகிறான் கிளார்க் கெண்ட். அவனுடைய இன்னொரு முகம் மிகவும் ரகசியமானது. அதுதான் சூப்பர்மேன் முகம். விரும்பியபடி பறவை போலப் பறப்பது, எதையும் ஊடுருவிப் பார்க்கிற எக்ஸ்ரே கண்கள், அபரிமிதமான உடல்பலம் இவையெல்லாம் சூப்பர்மேனின் அபூர்வ சக்திகள்.

தன்னுடைய சூப்பர் சக்திகளின் துணை கொண்டு, அக்கிரமக்காரர்களை எதிர்த்துப் போராடி, நீதியை எப்படி நிலைநாட்டுகிறான் என்பதுதான் ஒவ்வொரு சூப்பர்மேன் கதையும். இதைத்தான் உலகமே விழுந்து விழுந்து படித்துக் கொண்டிருக்கிறது.

சூப்பர்மேன் கதைகள் இன்று 25 மொழிகளில் வெளியாகின்றன. சூப்பர்மேனுக்கு ஒரு காதலியும் உண்டு. பெயர் லூயிஸ் லானா.

– மௌஷ்மி

# சக்கரவர்த்தித் திருமகன்



## 47. கரனும் ஒழிந்தான்!

ஜன ஸ்தானத்திலிருந்து கரனுடைய பதினான்கு சேனைத் தலைவர்களையும் அழைத்துக் கொண்டு சூர்ப்பனகை ராமனுடைய ஆசிரமத்துக்கு வந்தாள். பழி வாங்கி, ராஜகுமாரர்களைக் கொன்று, அவ்விடத்திலேயே அவர்கள் ரத்தத்தைக் குடிக்க வந்தாள்.

''அதோ அங்கே நிற்கிறார்களே அந்த இரு யுவர்களே என்னை அவமதித்து அங்கவீனம் செய்தது. அவர்களை உடனே கொல்லுங்கள்'' என்றாள்.

ராமன் விஷயத்தை யறிந்தான். உடனே லக்ஷ்மணனிடம், ''லக்ஷ்மணா! கொஞ்ச நேரம் சீதையைப் பார்த்துக் கொள். நான் இவர்களைப் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்று சொல்லி விட்டு வில்லையெடுத்து நின்றான்.

யுத்த வழக்கத்தை யனுசரித்து எதிர்க்க வந்தவர்களைப் பார்த்துத் தான் இன்னான் என்று சொல்லிவிட்டு, ''ஏன் எங்களைத் தொந்தரவு செய்ய வந்தீர்கள்? ரிஷிகளின் கட்டளைப்படி அரக்கர்களைத் தொலைக்கவே நாங்கள் இந்த வனத்தில் குடியிருக்கிறோம். உயிர் தப்பிப் போக விரும்பினால் சும்மா போங்கள்'' என்றான்.

அரக்கர்களும் வீரமாகப் பேசினார்கள். யுத்தம் ஆரம்பமாயிற்று. ராமனுடைய பாணங்கள் அரக்கர்களைக் கொல்ல அதிக நேரம் பிடிக்கவில்லை. அனைவரும் மாண்டார்கள்.

சூர்ப்பனகை மறுபடியும் கோரமாகப் புலம்பிக் கொண்டு கரனிடம் போய் அவன் முன்னிலையில் விழுந்தாள். விழுந்து புரண்டு கொண்டிருந்த சகோதரியைச் சமாதானப்படுத்தப் பார்த்தான். அவனுக்கு நிலைமை விளங்கவில்லை.

''யமனைப் போன்ற வீரர்களை அனுப்பினேன். இதற்குள் காரியம் முடிந்திருக்கும். ஏன் அழுகிறாய்? நான் இருக்க நீ இப்படி அழலாகாது'' என்றான்.

அவள் எழுந்து கண்களைத் துடைத்துக் கொண்டு சொன்னாள்.

''நீ பதினான்கு வீரர்களை அனுப்பினாய். உண்மையே. அவர்கள் பதினான்கு பெரும் பிணங்களாகக் கிடக்கிறார்கள். ராமனுடைய வீரத்தையும், அவன் அற்புத யுத்தத்தையும் உனக்கு நான் எப்படிச் சொல்லுவேன்? உன்னுடைய சேனாபதிகள் மாண்டார்கள். உனக்கு மானமிருந்தால் உடனே புறப்படு. ராமனோடு யுத்தம் செய்து ராக்ஷஸ குலத்தைக் காப்பாற்று. இல்லாவிட்டால் அழிந்தோம் என்பது நிச்சயம். உனக்கு ரோஷம் இருக்குமேல் புறப்பட்டு வா. ராமனை எதிர்த்து யுத்தம் செய். பயமாக இருந்தால் சொல். நீ உன்னையே சூரன் என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பயனில்லை. சூரனாக இருந்தால் ராமனை எதிர்த்துப் போர் செய். உன்னுடைய ராஜ்யத்திற்குள் புகுந்திருக்கும் இந்த யுவர்கள் உன் குலத்தை அழித்துத் தீர்க்க நிச்சயித்திருக்கிறார்கள்'' என்றாள்.

தன் சபையிலேயே இவ்விதம் சகோதரி தன்னை அவமானப் படுத்திப் பேசிய மொழிகள் கரன் உள்ளத்தில் சூலம் போல் பாய்ந்தன.

''இந்த அற்பனைக் கண்டு நீ இவ்வளவு பயந்து பேசுகிறாய். இன்னும் ஒரு கணம் காத்திரு - அவன் ரத்தத்தை நீ குடிப்பாய்!'' என்று கரன் எழுந்தான்.

''நீ ஒருவனாகப் போகாதே! சேனையைத் திரட்டிக் கொண்டு போ!'' என்றாள்.

அப்படியே கரனும் உத்தர விட்டான். சகல வித ஆயுதங்களும் கொண்ட

ராஜாஜி

பெரிய சேனை தூஷணன் தலைமையில் முன்னால் சென்றது. பின்னால் கரனும் மெதுவாகத் தேரில் சென்றான். போகும் போது அரக்கன் அபசகுனங்களைக் கண்டான். அவன் சிரித்து விட்டு, ''துர் நிமித்தங்களைக் கவனிக்காதீர்கள். நான் இதுவரை எந்த யுத்தத்திலும் தோற்றதில்லை. துஷ்டர்களாகிய இந்த அற்ப மானிடப் பூச்சிகளை நசுக்கி விட்டு வெகு சீக்கிரத்தில் திரும்புவோம்'' என்று தன் சேனைக்கு கர்ஜித்துச் சொன்னான். துர் நிமித்தங்களால் கொஞ்சம் பயமடைந்த அந்தச் சேனையும் மறுபடி உற்சாகமடைந்து சென்றது.

சேனை வரும் ஓசையைக் கேட்ட ராம லக்ஷ்மணர்களும் யுத்தத்துக்குத் தயாரானார்கள்.

''லக்ஷ்மணா! நிமித்தங்களைப் பார்த்தாயா? யுத்தம் வரும் என்பது நிச்சயம். ஜன ஸ்தானத்து ராக்ஷஸர்கள் அழிந்து போவது நிச்சயம். உன் முகத்தில் நான் காணும் பொலிவிலிருந்து நமக்கு வெற்றி நிச்சயம். நீ ஆயுதங்களும் கவசமும் தரித்து சீதையை அழைத்துப் போய்த் தகுந்த ஒரு மலைக் குகையில் ஜாக்கிரதையாக இருப்பாய். நான் இங்கே நின்று இந்த ராக்ஷஸ சேனையைப் பார்த்துக் கொள்ளுகிறேன். தாமதிக்க வேண்டாம். எனக்குத் துணை வேண்டியதில்லை'' என்று தம்பிக்குச் சொல்லிவிட்டு ராமன் கவசம் பூண்டு ஆயுத பாணியானான்.

லக்ஷ்மணன் ராமன் சொன்ன வண்ணம் சீதையை அழைத்துக் கொண்டு மலைக்குச் சென்று விட்டான்.

ஆகாயத்தில் தேவர்களும் கந்தர்வ சித்த சாரண கணங்களும் யுத்தத்தைப் பார்க்க வந்து விட்டார்கள். ராமனுடைய விஜயத்தை விரும்பி அவர்களும் ஸ்வஸ்தி சொன்னார்கள்.

ஒருவனாக நின்று எப்படி இந்தப் பெருஞ் சேனையைத் தாக்கி வெற்றியடையப் போகிறான் என்று ரிஷிகள் கவலை கொண்டார்கள். அச் சமயம் வில்லை வளைத்து நின்ற ராமசந்திரன் முகத்தில் ஜொலித்த தேஜஸானது பினாகி வில்லை வளைத்த ருத்திரனுடைய தேஜஸைப் போலவே ஜொலித்தது.

அரக்கன் சேனை வேகமாக வந்து விட்டது. சிம்ம நாதங்களும் வில்களின் டங்காரங்களும் பேரிகை நாதமும் கிளம்பி வனம் நிறைந்து விட்டது. காட்டு மிருகங்கள் எல்லாம் பயந்து இங்கு மங்கும் சிதறியோடின. ராமன் வில்லைப் பிடித்து நாண் ஏற்றி நின்





"'போலீஸ் காலனி' எங்கே இருக்குன்னு கேட்டா, இந்த ஊர்ல யாருக்குமே தெரியலையே?"
"'மாமூல் நகர்'னு கேளுங்க; அப்பத்தான் எல்லாருக்கும் புரியும்!"
– சீர்காழி வி. ரேவதி.

தான். ஆகாயத்தில் மேகக் கூட்டங்கள் சூழ்வன போல் ராக்ஷஸ சேனை ராமனைச் சூழ்ந்தது.

**யு**த்தம் ஆரம்பித்து மிகக் கோரமாக நடந்தது. ராமன் உடல் எல்லாம் அடிபட்டும் அசையாமல் நின்றான். இந்தப் பெருஞ் சேனையிலிடமிருந்து எப்படி ராமன் தப்புவான் என்று தேவர்களும் கவலைப்பட்டார்கள்.

ராமனுடைய பாணங்களுக்கு ஆயிரக்கணக்கான ராக்ஷஸ வீரர்கள் இரையானார்கள். தூஷணனே நேரில் ராமனுக்கு எதிரில் நின்று யுத்தம் செய்தான். ராமன் தன் வில்லை வளைத்து மண்டலமாகத் தன்னைச் சுற்றி பாணங்களைச் செலுத்தி வந்தான். வில்லில் அம்பும் பாணமும் பூட்டுவதாவது, அவை நாணினின்று விடுபடுவதாவது கண்ணுக்குத் தெரியவில்லை. ராமசந்திரன் நின்ற இடத்திலிருந்து சூரிய மண்டலத்திலிருந்து கிரணங்கள் வீசுவதுபோல் பாணங்கள் பூமியில் எட்டுத் திசைகளிலும் பரவிச்சென்று ஆயிரக்கணக்கான வீரர்கள், தேர்கள், யானை, குதிரை முதலிய வாகன விலங்குகள் அடிபட்டுப் பல பல வென்று பூமியில் வீழ்ந்து மாள்வதுதான் காணப்பட்டது. ஆகாயத்தில் அவன் செலுத்திய பாணங்கள் அரக்கருடைய உடல்களைத் துளைத்து ரத்தத்துடன் வெளிப்பட்டுக் கொழுந்து விட்டு எரியும் நெருப்பைப் போல் காணப்பட்டன.

அரக்கருடைய சேனை நிர்மூலமாயிற்று. ராமன் காலாந்த ருத்திரனைப் போல் நின்றான்.

**ம**றுபடியும் தூஷணன் ஒரு பெரும் படைப் பகுதியுடன் ராமன் மேல் பாய்ந்தான். கொஞ்ச நேரம் அவனுடைய அட்டகாசம் நடந்தது. பிறகு ராமனுடைய பாணங்களுக்கு அவன் தேர், தேர்க் குதிரைகள், சாரதிகள் எல்லாம் இரையாகி அவனே கீழே குதித்துத் தண்டாயுதத்துடன் ராமன் மேல் பாய எத்தனித்தான். ராமனுடைய பாணங்களால் அவன் இரு கைகளும் அறுபட்டுத் தரையில் பெரிய யானையைப் போல் விழுந்து மாண்டான்.

**தூ**ஷணன் மாண்டதைப் பார்த்து மற்ற ராக்ஷஸப்படை வீரர்கள் ஒன்று சேர்ந்து ராமசந்திரன் மேல் பாய்ந்தார்கள். அவர்களும் கோதண்டத்திலிருந்து வெளிப்பட்ட பாணங்களுக்குப் பலியானார்கள்.

இவ்வாறு கரனுடைய சேனை முற்றிலும் மாண்டது. சமுத்திரம் போல் ஓசை கிளப்பிய பெருஞ் சேனை அவ்வளவும் சப்தம் அடங்கிப் போய்ப் பிரேதங்களாகவும் வெட்டித் துண்டாக்கப்பட்ட ஆயுதங்களும் தேர்களுமாகக் கிடந்தது.

**க**ரனும் திரிசிரஸனும் இருவரே மிஞ்சினார்கள். அடங்கா ரோஷத்துடன் கரன் முன் சென்று ராமனோடு யுத்தத்தில் கலக்கப் போனான். திரிசிரஸனவன் கரனை நிறுத்தி, "நான் முன்னால் சென்று ராமனைக் கொல்வேன். வெற்றியுடன் ஜன ஸ்தானம் திரும்புவோம். அல்லது ராமனால் நான் கொல்லப்படுவேன். நான் மாண்டபின் நீ ராமனை எதிர்ப்பாய்" என்று சொல்லி அவனைத் தடுத்து விட்டு அந்த மூன்று தலை அரக்கன் தேர் ஏறி ராமனைத் தாக்கினான்.

திரிசிரஸ் ராமன் பேரில் பாணங்கள் விட்டான். அவற்றைப் பொறுத்து ராமன் கால சர்ப்பங்களைப் போன்ற பல பாணங்களைச் செலுத்த ஆரம்பித்தான். முடிவில் திரிசிரஸ் ரத்தம் கக்கித் தரையில் விழுந்து மாண்டான். அவனுடன் வந்த அரக்கர்கள் மான்களைப் போல் ஓடினார்கள்.

**இ**தைப் பார்த்த கரன் பயந்தோடிய அரக்கர்களை நிறுத்தி, தன் ரதத்தை ராமன் மேல் செலுத்தினான். அவனுடைய கர்வம் இதற்குள் அழிந்து விட்டிருந்த போதிலும் பலத்த யுத்தம் செய்தான். இருவருடைய பாணங்களும் ஆகாயத்தை மறைத்தன.

கரன் யமனைப் போல் தேரில்

நின்று பாணங்கள் விடுத்தான். ராமசந்திரன் தன் வில்லின் மேல் கொஞ்ச நேரம் சாய்ந்து நின்றான். அச்சமயம் கரன் விடுத்த அம்புகளால் ராமனுடைய கவசம் அறுபட்டுக் கீழே விழுந்தது. உடல் வெளிப்பட்டுச் சூரியனைப் போல் சக்கரவர்த்தித் திருமகன் பிரகாசித்தான்.

ராமன் வைஷ்ணவ வில்லை எடுத்தான். கரனுடைய ரதம் வில் எல்லாவற்றையும் துவம்சமாக்கினான். ரதமும் வில்லும் இழந்த கரன் கதாயுதம் எடுத்து ராமனை எதிர்க்க நின்றான். யுத்தத்தைப் பார்த்துக் கொண்டிருந்த தேவ ரிஷி கணங்கள் அச் சமயம் கவலையுடன் கை கூப்பி நின்றார்கள்.

''ஏ, கரனே!'' என்று ராமன் சொன்னான் : ''மக்களை இம்சித்து வந்தாய். உலகத்தாருக்குத் துக்கம் விளைந்து வருபவன் எவ்வளவு பலவானானாலும் மாள்வான். வனத்தில் தவம் செய்தும் விரதம் காத்தும் வந்த ரிஷிகளை ஏன் துன்புறுத்தியும் கொன்றும் வந்தாய்? அந்தப் பாவங்களின் பயனை இப்போது அடையப் போகிறாய். பாப காரியங்களைச் செய்து உலகத்தின் வெறுப்பைச் சம்பாதித்தவர்கள் அழிந்து போவது நிச்சயம். ரிஷிகளைக் கொன்று தின்றீர்களே அந்த ரிஷிகள் விமானத்தில் அமர்ந்து வானத்திலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கொடிய அரக்கர்களை நிர்மூலமாக்கவே நான் தண்டகாரண்யத்துக்கு வந்திருக்கிறேன். என் பாணங்கள் உன் குலத்தார் உடல்களில் புகுந்து உயிரைக் குடிக்கும். செய் யுத்தம். உன் தலை பனங்காய் போல் கீழே உருளப் போகிறது!''

''அடே மனிதப் பூச்சியே!'' என்றான் கரன். ''தசரதன் மகனே! ஏன் அதிகமாகப் பேசுகிறாய்? பாமர அரக்கர்களைக் கொன்று விட்டாய் என்று கர்வம் கொண்டு விட்டாயா? வீரன் தன்னைத் தானே புகழ்ந்து பேசிக் கொள்ள மாட்டான். நீ பேசுவது அற்பர்கள் பேச்சு. குலத்திலிருந்து நீக்கப்பட்ட க்ஷத்திரியர்கள்தான் இப்படி வீரம் பேசுவார்கள். பொருளற்ற பேச்சு பேசாதே! யுத்தம் செய். மரணம் அடுத்து நிற்கும் போதுதான் இத்தகைய தற்புகழ்ச்சிப் பேச்சு கிளம்பும். உன்னுடைய அற்ப குணம் இதனின்று வெளியாயிற்று. காட்டுப் புல் பெரிதாக எரிவது போல் மிகப் பிரகாசமாகப் பேசுகிறாய். அது பயனற்ற நெருப்பாகும். இதோ கதையைப் பிடித்து நிற்கிறேன். உன் உயிரைக் கொண்டு போகும் யமனாக நிற்கிறேன். மாலை ஆகப்போகிறது. யுத்தம் நிறுத்த வேண்டிய தாகும். ஆனபடியால் உடனே உயிரை இழக்கத் தயாராக நில். நீ கொன்ற இவ்வளவு பேர்களின் பழியைத் தீர்க்க நான் வந்தேன்!'' என்று சொல்லிக் கையில் பிடித்த கதாயுதத்தைச் சுழற்றி ராமனை நோக்கி எறிந்தான்.

ராமனுடைய பாணங்களால் கதாயுதம் அந்த நிமிஷத்தில் துண்டிக்கப்பட்டு வேகமற்றுத் தரையில் விழுந்தது.

''அரக்கனே! உன் வீரப் பேச்சு முடிந்ததா? இன்று நீ சாவாய். இந்த வனம் இனி சுகமாக இருக்கும். முனிவர்களை இம்சித்த உன் ரத்தத்தைப் பூமி குடிக்கப் போகிறது'' என்றான் ராமன்.



அமைச்சர் : என்னய்யா டூர் போகத் துணியெல்லாம் மூட்டையாக் கட்டிக் கொண்டு போகலாங்களே?

உதவியாளர் : சூட்கேஸ் எடுத்துக் கிட்டுப் போனா ஜனங்க ஒரு மாதிரியா பார்க்கறாங்க சார்!

– எஸ். ராகவேந்திரா.

இவ்வாறு ராமன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே கரன் அங்கிருந்த ஒரு பெரிய ஆச்சா மரத்தைப் பிடுங்கி உதட்டைக் கடித்துக் கொண்டு, ''நீ செத்தாய்'' என்று சொல்லி ராமன் மேல் எறிந்தான்.

இதையும் ராமன் தன் திவ்விய பாணங்களால் தடுத்து வெட்டித் தள்ளி, இனி தாமதம் கூடாது, இவனைச் சீக்கிரம் முடித்துவிட வேண்டும் என்று பல பாணங்களை அவன் மேல் எய்து, அவன் உடல் ரத்தப் பிரவாகத்தில் மிதக்கச் செய்தான்.

பெருங் காயங்கள் அடைந்த வெறியுடன் கரன் ராமன் மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான். வில் வளைத்து



பாணம் விட இடமில்லாமல் நெருங்கவே ராமன் பின்னுக்குக் குதித்து ஒரு இந்திர பாணத்தை விடுத்து அரக்கனுடைய மார்பைப் பிளந்தான். கரன் மாண்டான்.

ஆர்த்தெ ழுந்தனர்
    ஆடினர் பாடினர்
தூர்த்த மைந்தனர்
    வானவர் தூய்மலர்
தீர்த்த னும்பொலித்
    தான்கதி ரோன்திசை
போர்த்த மென்பனி
    போக்கிய தென்னவே.

தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். "பாப கர்மங்கள் நிகழ்த்திய அரக்கனைக் கொன்று ஒழித்தான். தண்டகவனத்தில் இனி சுகமாக மக்கள் இருக்கலாம். மூன்று நாழிகைக்குள் கர தூஷணர்களையும் திரிசிரஸையும் அவர்களுடைய சேனையையும் ராமசந்திரன் நிர்மூலம் செய்து விட்டான். இவன் அல்லவோ வீரன்" என்று சொல்லிக் கொண்டு தேவர்கள் திரும்பினார்கள்.

சீதையும் லக்ஷ்மணனும் மலையினின்று திரும்பி வந்தார்கள். ரிஷிகளுக்குக் கொடுத்த அபய உறுதியைச் சொல்லிய வண்ணம் காத்த தனி வீரன் ராமனைத் தம்பி தழுவிக் கொண்டு அடைந்த மகிழ்ச்சி சொல்லுக்கு அடங்காது.

அரக்கர் உடல்களினின்று சிதறி விழுந்த ரத்தமும் பாதங்களில் பட்டு நின்ற யுத்தகளத்துத் தூசியும் தம்பியும் தேவியும் விட்ட கண்ணீர் கழுவி விட்டது என்கிறார் கம்பநாட்டாழ்வார்.

விண்ணில் நீங்கிய
    வெய்யவர் மேனியின்
புண்ணின் நீரும்
    பொடிகளும் போயுக
அண்ணல் வீரனைத்
    தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினில்ப்
    பாதம் கழுவினார்.

ஒருவன் தனியாக எவ்வாறு இவ்வளவு காரியங்களைச் செய்து தீர்த்தான்? ஒரு பசுமாடு தன் கன்றைக் காக்க மக்கள் கூட்டத்தின் மேல் பாய்ந்து அவர்கள் அத்தனை பேரும் விழுந்து ஓடிச் சிதறிப் போவதைப் பார்த்தால் உண்மை உணர்ச்சி பாய்ந்த ஓர் உயிருக்குள் எவ்வளவு வேகமும் சௌரியமும் பலமும் வந்து சேரும் என்பதை ஒருவாறு காணலாம். தெய்வமே மனித உருவத்தில் வந்து அநாதைகளுக்கு அபயம் தந்து அந்தச் சத்தியத்தைக் காக்க முனைப்பட்டால் அந்த மனிதன் எவ்வளவு செய்வான் என்பதைச் சிந்தனைச் சிற்ப சக்தியைக் கொண்டு காணலாம். ராமனை அவதார புருஷனாகத்தான் கம்பரும் வால்மீகியும் எடுத்துக் கொண்டு வெவ்வேறு விதத்தில் நமக்கு நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கிறார்கள். சில இடங்களில் தெய்வப் பிரசாதம் பெற்ற வீரனாகவும் சில இடங்களில் தெய்வமாகவேயும் எடுத்துக் காட்டுகிறார்கள். ஆனால் ராமன் தன்னைத் தெய்வமாக எப்போதும் எண்ணவில்லை. மனிதனாகவே, க்ஷத்திரிய வீரனாகவே சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு, தரும முயற்சிகளில் ஈடுபட்ட மானிடனாகவே வேதாந்த ஞானம் பெற்ற தீரனாகவே எல்லையற்ற சக்தியைப் பெறக் கூடிய ஆத்மாவாகவே தன்னை எண்ணி வந்தான்.

அரக்கருடைய பெருஞ் சேனை ராமனைத் தாக்க, திடீர் என்று வந்து நின்று 'அதோ அவன் தான்' என்று சூர்ப்பனகை அவர்களுக்குக் காட்டிய சமயம் ராமன் என்ன செய்து கொண்டிருந்தான் என்பதைக் கம்பர் பாடுகிறார் :

துமிலப் போர்வல்
    அரக்கர்க்குச் சுட்டினாள்
அமலத் தொல்பெயர்
    ஆயிரத்(து) ஆழியான்
நிமலப் பாத
    நினைவின் இருந்தஅக்
கமலக் கண்ணனைக்
    கையினில் காட்டினாள்.

நாராயணனே தானே ராமன் என்று அறிவான். ஆனால் ராமன் தானே நாராயணன் என்றெண்ண வில்லை. நாராயணனைத் தியானித்து ஆன்ம பலமும் எல்லா பலமும் பெற்று வந்தான்.

(தொடரும்)

போலீஸ் : வர வர கோயில்கள்ல திருடுறத மட்டும் வாடிக்கையாக்கிட்டியே... ஏன்?
திருடன் : நாற்பது வயசுக்கு அப்புறம் ஆன்மீகத்துல ஈடுபடணும்னு என் ஜாதகத்துல இருக்கு! - அம்பை தேவா.





# RPS BENEFIT FUND LTD

(Declared as "NIDHI" by the Central Governemnt)



%P.A.

உங்களுக்கு வழங்குகிறது
20% வட்டி ...
கிடைக்கிறது 100%
நம்பகமான சேவை.

## பென்ஷனர் பெனிபிட் டெபாசிட் திட்டம்

(காலம் 12 மாதங்கள்)

| | |
|---|---|
| ரூ. 12,000/- மற்றும் அதற்குக் கூடுதலான டெபாசிட்டுகளுக்கு | : ஆண்டுக்கு 20% |
| ரூ. 5,000/- லிருந்து ரூ. 12,000/- வரையிலான டெபாசிட்டுகளுக்கு | : ஆண்டுக்கு 19% |
| ரூ. 5,000/- க்குக் குறைவான டெபாசிட்டுகளுக்கு | : ஆண்டுக்கு 18% |

வயதுமுதிர்ந்தோர், முன்னாள் ராணுவத்தினர், விதவைகள் மற்றும் உடல் ஊனமுற்றவர்கள் இத்திட்டத்தின் மூலம் பயன் பெறலாம். பிரதி மாத வட்டிக்கான பின் தேதியிட்ட வாரண்டுகள் முன்னதாகவே வழங்கப்படும்.

**இதர சேமிப்புத் திட்டங்கள்:**
ஃபிக்சட் டெபாசிட்டுகள், குமுலேடிவ் டெபாசிட்டுகள் மற்றும் சேவிங்ஸ் டெபாசிட்டுகள்.

**நகை மற்றும் அடமானக் கடன் :**
தங்க ஆபரணங்கள் மீது உடனடியாக வழங்கப்படும் கடன் தவிர, சென்னை நகரில் அமைந்துள்ள அசையாச் சொத்துக்களின் மீதும் கடன் பெறலாம்.

**P.G. சரண்யன்**
எக்சிக்யூடிவ் பிரஸிடெண்ட்

உறுப்பினர்களுக்கு மட்டும்
வேலை நேரங்கள்

வார நாட்கள் : காலை 9.30 முதல் மாலை 5.00 வரை
ஞாயிற்றுக்கிழமை : காலை 9.00 முதல் 11.30 வரை
வெள்ளிக்கிழமை விடுமுறை.

**தலைமை அலுவலகம்:**
விஜயசாந்தி காம்ப்லக்ஸ், முதல் மாடி, 16, இராமநாதன் தெரு, தி.நகர், சென்னை-600 017. போன்: 441554

**கிளை:**
ஹார்மணி பில்டிங், 433-F, D.B. ரோடு, ஆர்.எஸ்.புரம், கோயம்புத்தூர்-641 002. போன்: 43576.

**வளரும் வட்டியுடன் வளரும் நம்பிக்கை**

AKSHAR



# தங்க பாப்பா

பிறப்பதற்குச் சில வினாடிகள் முன்பு இறந்து விடுகிற ஒரு சிசுவின் ஆத்மா, வேறோர் குழந்தையின் உடலில் புகுந்து கொண்டு அடிக்கிற லூட்டி - கதை. கொஞ்சம் 'யார்', கொஞ்சம் 'ஜென்ம நட்சத்திரம்'. உல்ட்டா என்றாலும் பர்ஃபெக்ட் உல்ட்டா.

ஹீரோ, ஹீரோயின், கேரக்டர், ஆர்ட்டிஸ்ட் சகலமும் ஷாம்லி. குருவி தலையில் கோவர்த்தனகிரி. அந்தத் துடிப்பு, அந்தச் சிரிப்பு, அந்தத் தவிப்பு - பாப்பா சிவாஜி.

குழந்தைக்குப் போன ஜென்ம ஞாபகம் வருவது, அதை சும்மா வாய் வார்த்தையாக ஒரு சாதா பாதிரியார் ஞானதிருஷ்டியில் கண்டு சொல்வது, ரோஜாப்பூ கொடுத்து வில்லன்களை அசாதாரணமாகக் கொல்வது - எல்லாம் இயல்புக்கு ஏழெட்டுப் படி மேலே நடக்கிற சமாசாரங்கள்.

டைரக்டரின் நோக்கம் ஒவ்வொரு ஷாட்டிலும் பயமுறுத்துவது. எனவே ஒரு சூன்யக்கிழவி, பேய் பங்களா இத்யாதி. தவிரவும் நரம்பைத் தீண்டும் பின்னணி இசை. (தேவா? ஆச்சர்யம், மகாமகா ஆச்சர்யம்!)

கேமராக்காரர் ஊட்டி முழுக்கச் சுற்றியிருக்கிறார். 70 எம்.எம். உழைப்பு. அது சரி, ஊட்டியில் எங்கே துறைமுகம் வந்தது?

சமீபத்திய அதிரடித் தாக்குதல்களுக்குப் பிறகு அடக்க ஒடுக்கமாய் புடைவை கட்டிய ஐஸ்வர்யா. பாப்பாவுக்கு அம்மாவாய்ப் படம் முழுக்க பயந்து சாகிறார்.

நிறைய கேரக்டர்கள் வந்து போனாலும் அந்தக் 'குட்டி' மட்டுமே ஒட்டிக் கொள்கிறது.

பாப்பாவுக்காகப் பார்க்கலாம்!

- ஆர்.பி.ஆர்.

1



# சூப்பர் ஃபாஷன்!

1. லாங் கோட்டி : பெரும்பாலும் ஸ்பன் வகைத் துணிகளில் தயாரிக்கப்படும் இந்த உடை, கால் முட்டிக்குக் கீழ் வரை நீண்டிருக்கிறது. சல்வார் கம்மீஸோடு சேர்ந்த இந்த மேல் உடையோடு துப்பட்டாவையும் அணிந்து கொள்வது பம்பாய் ஃபேஷன்.

2. பெர்முடாஸ் : நீண்ட அகலமான நிக்கர்கள் இவை. டீன்-ஏஜ்களின் வயது அதிகமாக அதிகமாக, பெர்முடாஸின் 'உயரம்' அதிகமாகிறது. இதன் மேலுடை ஷார்ட்-டாப்ஸ். வட்டக் கழுத்தும் 'V' ஷேப் கழுத்தும் இக் துணி வகையறாவில் சமீபத்திய புரட்சி.

3. ஈவினிங் வேர் ஷர்ட்ஸ் : (பகலிலும் அணியலாம்) தற்போது மிக வேகமாக விற்பனையாகும் ஆண்கள் உடை. பல வகைகளில் பிரிண்டடாகவோ, பிளெய்னாகவோ கிடைக்கிறது. காட்டன்தான்.

3

5



4. ஹூட் ஷர்ட்ஸ் : பார்த்தால் ரெயின் கோட் மாதிரி தெரியலாம். பம்பாயில் இதுவே தற்சமயம் சூப்பர் பேஷன். நம் ஊரி லும் வந்து கொண்டே இருக்கிறது. ஆனால் இங்கே தொப்பியைக் கழுத்தில் தொங்க விடுவதுதான் ஸ்டைல்.

5. பார்ட்டி வேர் - மைக்ரோ ஸில்க் - ஷர்ட் : முற்றிலும் பசை உள்ளவர்களுக்கான வகையறா. இதிலேயே பியூர் ஸில்க், ஸான்ட் வாஷ் ஸில்க், பிரின்டட் ஸில்க் என பலவிதம் உண்டு. படத்தில் காணும் சட்டை யின் விலை - மூச்சைப் பிடித்துக் கொள்ளுங் கள் - ரூ. 999/-!

- துளஸி

நன்றி : வீக் எண்டர், ஜிப்ஸி ரோஸ், இம்ப்ரஷன்ஸ்

மாடல்கள் : பி.ஜி. திலக்ராம், எம். தீப்தி, பி. ஜகதீஷ் சாப்ரியான்

2



4



## சூப்பர் ஸ்பெஷல்

# மருத்துவமனை!

**வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர் (NRI) களால் ஆரம்பித்து நடத்தப்பட்டுக் கொண்டிருக்கும் 'தமிழ்நாடு மருத்துவமனை'யில் மட்டும்தான் இந்தியாவிலேயே அமெரிக்க மருத்துவத் தரத்தோடு சிகிச்சையளிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது.**

**அது என்ன அமெரிக்க மருத்துவத் தரம்? விளக்குகிறது இந்தக் கட்டுரை...**

"எனக்குத் தாங்க முடியாத தலைவலி. அத னால் பெரும்பாலான நேரம் வலியால் துடித்துத் துடித்துக் கதறியழுது கொண்டுதான் இருப்பேன். சென் னையில் இருக்கிற பெரிய பெரிய ஆஸ்பத்திரி களிலெல்லாம் போய் வைத்தியம் பார்த்தும் எனக்குக் குணமாக வில்லை. கடைசியில் தமிழ்நாடு ஆஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்தேன். மூளையில் கட்டி என்று ஆபரே ஷன் செய்தார்கள். இப்போது பூரணமாகக் குணமாகி விட்டது. இன்னும் இரண்டு நாளில் டிஸ்

* சி.பி. வேலுசாமி

* புற்றுநோய்க்கு நவீன சிகிச்சை





✱ புருஷோத்தமன்

சார்ஜ் ஆகப் போகிறேன்!'' என்றார் தமிழ்நாடு மருத்துவமனையில் நாம் சந்தித்த புருஷோத்தமன்.

''இங்கே கவனிப்பெல்லாம் எப்படி?''

''நன்றாகப் பார்த்துக் கொள்கிறார்கள். எந்த நேரமும் இங்கே எந்த டாக்டரை வேண்டுமானாலும் பார்க்கலாம்! மற்ற ஆஸ்பத்திரிகள் மாதிரி குறிப்பிட்ட டாக்டரை குறிப்பிட்ட நேரங்களில மட்டும்தான் பார்க்க முடியும் என்பதெல்லாம் கிடையாது!'' என்கிறார் புருஷோத்தமன்.

''இங்கே பணிபுரியும் டாக்டர்கள் அனைவருமே அமெரிக்கா போன்ற வெளிநாடுகளில் பிராக்டீஸ் செய்து விட்டு வந்தவர்கள் என்பதால், டாக்டர்களுக்குப் பயந்து பயந்து நாங்கள் பணிபுரிய வேண்டிய அவசியமில்லை. டாக்டர்களை நாங்கள் 'டாக்டர்' என்று கூட அழைப்பதில்லை. பெயர் சொல்லித்தான் அழைக்கிறோம். அந்த அளவுக்கு நட்புரிமையோடு பணிபுரிகிறோம்!'' என்கிறார் நர்ஸாகப் பணிபுரியும் எம். எஸ். சாந்தா.



சரி, அமெரிக்காவில் அளிக்கப்படுகிற எல்லாச் சிகிச்சைகளும் தமிழ்நாடு மருத்துவமனையிலேயே அளிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறதே, உதாரணத்திற்கு ஒன்று சொல்ல முடியுமா?

''சிலருக்குத் திடீரென்று மூளைக்குச் செல்லும் ரத்தக்குழாய்களில் கொழுப்புப் பொருள்கள் அடைத்துக் கொண்டு விடும். அதனால் தாற்காலிகமாக மூளைக்கு ரத்த ஓட்டம் தடைப்படும். அதற்கு Transient Ischemic Attack என்று பெயர். இது சில நிமிடங்களிலோ அல்லது சில மணி நேரங்களிலோ பலருக்கும் தானாகவே குணமாகி விடும் என்றாலும், இதை அப்படியே விட்டு விட்டால் கடைசியில் வலிப்பு நோயாக மாறி விடும் அபாயம் இருக்கிறது.

''இப்படிப்பட்ட நோயைக் குணமாக்குவதற்கு Crotid Endarterectomy என்னும் ஆபரேஷன் செய்தாக வேண்டும். பெரும்பாலும் இதைச் செய்து கொள்பவர்கள் அமெரிக்காவுக்குச் சென்றுதான் செய்து கொள்கிறார்கள். காரணம், இந்த ஆபரேஷனில் சிறிய தவறு நடந்தாலும் நிரந்தரமாகவே நோயாளியின் கைகால்கள் விளங்காமல் போய் விடும் அபாயமிருக்கிறது. அத்தனை நுல்லியமான ஆபரேஷன் அது என்பதால் டாக்டர்களும் ரிஸ்க் எடுக்கத் தயங்குவார்கள். ஆனால் தமிழ்நாடு மருத்துவமனையில் நாங்கள் இதை சர்வசாதாரணமாகச் செய்கிறோம். அந்த அளவுக்கு எங்களிடம் நவீன உபகரணங்களும் திறமையான டாக்டர்களும் இருக்கிறார்கள்!'' என்கிறார் டாக்டர் பெலார்மின்.

''எந்த ஒரு நோய்க்கும் சிகிச்சையளிக்க நவீன உபகரணங்கள் மட்டும் இருந்து விட்டால் போதுமா?''



✱ அதிநவீன பரிசோதனைக்கூடம்...



* எம்.எஸ். சந்திரா



* டாக்டர் பெலார்மின்

''போதாது. டாக்டர்களும் ரிஸ்க் எடுக்கத் தயாராய் இருக்க வேண்டும். அப்படி ரிஸ்க் எடுப்பதற்கு மருத்துவ உலகின் நவீன கண்டுபிடிப்புகள் வரை அந்த டாக்டர்கள் அறிந்திருக்க வேண்டும். நாங்கள் அறிந்திருக்கிறோம். இவற்றோடு, இன்னொரு உதாரணமும் சொல்கிறேன்.

''ஒரு நோயாளிக்கு வயிற்றில் ஒரு ஆபரேஷன் நடப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது, வயிறு சம்பந்தப்பட்ட நோய்களில் ஸ்பெஷலிஸ்டாகவுள்ள டாக்டர் ஒருவர்தான் அந்த ஆபரேஷனைச் செய்வார். அந்த ஆபரேஷனின் போது, வயிற்றில் ஏதாவது புற்றுநோய்க்கான அறிகுறிகள் தென்படுவதாக வைத்துக் கொள்வோம். சாதாரணமாக, மற்ற மருத்துவமனைகளில் என்ன செய்வார் அந்த டாக்டர்? அவர் சம்பந்தப்பட்ட ஆபரேஷனை முடித்து விட்டுப் பிறகுதான் புற்றுநோய் தொடர்பான டாக்டரிடம் போய்க் கன்சல்ட் செய்யும்படி நோயாளியிடமோ அல்லது அவரது உறவினர்களிடமோ கூறுவார். அப்புறம்தான் அந்த நோயாளி புற்றுநோய் நிபுணரிடம் சென்று சோதனைகள் செய்து, சிகிச்சையை ஆரம்பிக்க முடியும்.

''இங்கே அப்படியில்லை. வயிறு சம்பந்தமான ஆபரேஷன் நடந்து கொண்டிருக்கும்போதே, உடனடியாகப் புற்றுநோய் நிபுணர் வரவழைக்கப்படுவார். அவர் சந்தேகப்படும் இடத்தை ஆராய்ந்து, எங்களிடமுள்ள அதிநவீனமான பரிசோதனைக் கூடத்திற்கு அனுப்புவார். அனுப்பிய பத்தே நிமிடங்களில் சோதனைச் சாலையிலிருந்து அது புற்றுநோயா இல்லையா என்கிற ரிசல்ட் தெரிந்து விடும்!

''சுருக்கமாகச் சொன்னால், மற்ற ஆஸ்பத்திரிகளில் நோயாளிகள் தான் டாக்டர்களைத் தேடி ஓட வேண்டும். ஆனால் இங்கோ தேவைப்படும் எல்லா டாக்டர்களும் நோயாளியைத் தேடி ஓடி வருவார்கள். அதற்கு நேரங்காலமெல்லாம் கிடையாது!'' என்கிறார் டாக்டர் பெலார்மின்.

தற்போது, சிறுநீரகக் கோளாறு உள்ளவர்களுக்கான டயாலசிஸ் முறையில் புதிய முறை ஒன்று வந்திருக்கிறது. அதற்கு Continous Ambulatory Peritoneal Dialysis (CAPD) என்று பெயர். அதாவது சிறுநீரகக் கோளாறு என்று வந்து விட்டால், சிறுநீரக மாற்றம் செய்தாக வேண்டும். அதுவரை டயாலசிஸ் என்கிற ரத்தச் சுத்திகரிப்பை வாரம் இரு முறையாவது இயந்திரங்களின் மூலம் செய்தாக வேண்டும். CAPD என்பது இன்றைய நவீனமுறை.

அதாவது வயிற்றில் ஒரு துளையிட்டு டியூபைச் செருகி விடுகிறார்கள். CAPD-Kit என்று சொல்லப்படுகிற திரவம் அடங்கிய ஒரு பையை குளுகோஸ் பாட்டிலைத் தொங்க விடுகிற மாதிரி தொங்க விட்டு, டியூபின் மூலம் அதை வயிற்றுக்குள் செலுத்துகிறார்கள். அது வயிற்றுக்குள் சென்று, சிறுநீரகம் செய்ய வேண்டிய ரத்தச் சுத்திகரிப்புப் பணியைத் தொடர்ந்து செய்கிறது. பிறகு நான்கைந்து மணிநேர இடைவெளிக்குப் பிறகு, பழைய திரவத்தை வெளியேற்றி விட்டுப் புதிய திரவத்தை உட்செலுத்துகிறார்கள். இதைத் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்க வேண்டும். ''சில நாட்கள் பழகி விட்டால் நோயாளி தமது வீட்டிலிருந்தபடியே கூட இதைச் செய்து கொள்ள முடியும்!'' என்கிறார் டாக்டர் ஜார்ஜ் ஆபரஹாம்.

இந்தச் சிகிச்சையும் தென்னிந்தியாவிலேயே தமிழ்நாடு மருத்துவமனையில்தான் செய்யப்படுகிறது. சரி, டயாலசிஸ் செய்து கொள்வதற்கும் CAPD செய்து கொள்வதற்கும் என்ன வித்தியாசம்?

''டயாலசிஸ் என்பது மூன்று நாட்களுக்கு ஒருமுறைதான் செய்கிறோம். அதுவரை ரத்தம் சுத்திகரிக்கப்படாமல்தான் இருக்கும். ஆனால் CAPD முறையில், சிறுநீரகங்கள் தொடர்ந்து ரத்தச் சுத்திகரிப்புச் செய்து கொண்டிருப்பது போலவே சுத்திகரிப்புச் செய்யப்படுவதால், எனக்குச் சிறுநீரகம் பழுதடைந்து போனதே மறந்து போய் விடுகிற அளவுக்கு ஆரோக்கியமாக உணர்கிறேன்!'' என்கிறார் தமிழ்நாடு மருத்துவமனையில் CAPD செய்து கொண்டிருக்கும் திருமதி சரோஜினி குமாரசுவாமி.

அவருக்கு நமது அரசின் மீது பெரிய வருத்தம். ''CAPD-Kit ஐ சிங்கப்பூரிலிருந்துதான் தருவித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்காக ஒவ்வொரு முறையும் சுங்க வரி விலக்குக்காக சுங்க இலாகாவினரிடம் அனுமதி வாங்க வேண்டும். இதைத் தவிர்க்க வேண்டுமானால் CAPD-Kit ஐ உயிர் காக்கும் மருந்துகளில் ஒன்றாக அரசாங்கம் அறிவிக்க வேண்டும். நானும் எத்தனையோ மனுக்களை அனுப்பி விட்டேன். அரசு

# சூப்பர் கம்ப்யூட்டர்!

சூப்பர் கம்ப்யூட்டர் 84 - ல் தான் சாத்தியமாயிற்று. மற்றெந்தக் கம்ப்யூட்டர்களையும் விட இந்த சூப்பர்கள் எந்த விதத்தில் உசத்தி என்றால், அசாத்தியமான கம்ப்யூடேஷன் வேகம்; ஞாபக சக்தி. இதனால் அபரிமிதமான விலை.

முதல் சூப்பர் கம்ப்யூட்டரை அமெரிக்கா தான் உருவாக்கியது. இதன் பணித்திறன் 400 மெகா ஃப்ளாப்ஸ் அதாவது விநாடிக்கு பத்து லட்சம் ஃப்ளோட்டிங் பாயிண்ட் ஆபரேஷன்கள். ('ப்ளோட்டிங் பாயிண்ட் என்றால் என்ன?' என்பவர்களுக்குச் சிறு விளக்கம். எண்களைக் கம்ப்யூட்டர் பாஷையில் குறிப்பிடும் பிரத்யேக முறைதான் அது. ஃப்ளோட்டிங் பாயிண்ட் ஆபரேஷன் என்றால், அந்தக் குறியீடுகளின் அடிப்படையிலான கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் இத்யாதிகள்). சாதாரண கம்ப்யூட்டர்களில் ஒன்றை யடுத்து ஒன்றாகச் செய்யப்படும் கணக்கீடுகள், சூ.கம்ப்யூட்டர்களில் ஒரே நேரத்தில் செய்யப்பட்டு விடுகின்றன. உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால் ஒரு பிரம்மாண்டமான நூலகத்தில் உள்ள அனைத்துப் புத்தகங்களிலும் உள்ள எல்லாவிவரங்களையும் ஒரு சூப்பர் கம்ப்யூட்டரில் பதிவு செய்து கொள்ள முடியும். தேவையான போது பட்டனைத் தட்டினால், எந்தப் புத்தகத்திலும் எந்தப் பக்கத்திலும் உள்ள எந்த ஒரு விவரமும் உடனடியாகக் கிடைக்கும்.



- ஜூலி

---

அசையமாட்டேன் என்கிறது!'' என்கிறார் திருமதி சரோஜினி குமாரசுவாமி.

''எங்களிடமுள்ள இரத்த வங்கியிலும் ஒரு ஸ்பெஷாலிட்டி - வேறெங்கும் இல்லாத நவீனமுறை இருக்கிறது!'' என்கிறார் டாக்டர் பார்த்தசாரதி.

''ஆமாம்! மற்ற இடங்களிலெல்லாம் இரத்தம் தேவைப்படுவோருக்கு தேவையான குரூப் இரத்தத்தை அப்படியேதான் செலுத்துவார்கள். நாங்கள் அப்படியல்ல; சிவப்பணு தேவைப்படுவோருக்குச் சிவப்பணுக்களை மட்டும்தான் செலுத்துவோம்; வெள்ளை அணுக்களையும் அப்படியே செலுத்துவோம்; தீக்காயங்கள் ஏற்பட்டோருக்கு இரத்தத்திலுள்ள பிளாஸ்மா மட்டுமே தேவைப்படும் என்பதால் அதை மட்டுமே தான் தருவோம்!'' என்கிறார் அவர்.

''இப்படித் தருவதில் என்ன லாபம்?''

''இரத்தத்தை முழுமையாக அப்படியே தரும் போது, சிவப்பணுக்கள், வெள்ளையணுக்கள், பிளாஸ்மா என்று அனைத்துமே அந்த நோயாளிக்குத் தான் போய்ச் சேரும். பல நோயாளிகளுக்கு இப்படி அனைத்துமே தேவையாக இருப்பதில்லை. இவற்றில் ஏதாவது ஒன்று இருந்தாலே போதும். இந்த நிலையில் மற்றவை வீண்தானே! அப்படி வீணாகி விடக் கூடாது என்பதற்காகத்தான் நாங்கள் இரத்தத்திலுள்ள சிவப்பணு, வெள்ளையணு, பிளாஸ்மா போன்றவற்றைத் தனித்தனியாகப் பிரித்து, தேவைப்படுவோருக்குத் தேவையானதை மட்டும் தந்து, இரத்தத்திலும் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கிறோம். இதோடு, எங்களது நவீன சோதனைக்கூடத்தில் இரத்தத்தை முழுமையாகப் பரிசோதித்து, எந்த நோயும் அதில் இல்லையென்ற நிலையிலேயே பிறருக்குச் செலுத்துகிறோம்!'' என்கிறார் டாக்டர் பார்த்தசாரதி.

''அமெரிக்காவில் தரப்படுகிற சிகிச்சையை எங்கள் தமிழ்நாடு மருத்துவமனையிலேயே தருகிறோம் என்று கூறுவதற்கு, அமெரிக்காவிலுள்ள நவீன சிகிச்சை முறைகளை இங்கே கையாளுகிறோம் என்பது மட்டுமல்ல காரணம். அமெரிக்கச் சிகிச்சை முறைகளின் தரத்தை இங்கே தருகிறோம் என்பதுதான் முக்கிய காரணம்!'' என்கிறார் தமிழ்நாடு மருத்துவமனையின் மானேஜிங் டைரக்டர் சி.பி. வேலுசாமி.

''அமெரிக்கத் தரம் என்பது என்ன?''

''இங்கே பணிபுரியும் டாக்டர்கள் யாரும் வேறெங்கும் தனியாக பிராக்டீஸ் செய்ய மாட்டார்கள். அதனால் அவர்களுடைய சேவை இருபத்து நான்கு மணிநேரமும் இங்குள்ள நோயாளிகளுக்கே கிடைக்கிறது. அதனால், ஒவ்வொரு நோயாளி

யையும் ஆதியோடந்தமாக விசாரித்துத் தெரிந்து கொண்ட பிறகே சிகிச்சையை ஆரம்பிக்கிறார்கள். அவர்கள் அளிக்கும் ஒவ்வொரு சிகிச்சையையும் ரெகார்ட் செய்கிறார்கள். அதாவது ஒவ்வொரு சோதனையின் போதும் அது எதற்காகச் செய்யப்படுகிறது என்பதையெல்லாம் விலாவாரியாக ரெகார்ட் செய்கிறார்கள். அது பற்றி நோயாளியிடமும் சொல்கிறோம். எழுத்துபூர்வமாகவும் தருகிறோம். இதை மற்ற மருத்துவமனைகளில் எதிர்பார்க்க முடியாது.

''உதாரணத்திற்கு, ஒரு டாக்டர் ஒரு நோயாளியை ஸ்கேன் செய்யச் சொல்லுகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர் எந்த நோயை அனுமானித்து, ஸ்கேன் செய்யச் சொன்னாரோ அந்த நோய் இல்லாமல் போவதாக வைத்துக் கொள்வோம். இப்படி இரண்டு மூன்று முறை அந்த டாக்டரின் அனுமானம் தவறாகிறபோது, அவர் ஏன் இப்படிப்பட்ட தவறான அனுமானங்களை எடுக்கிறார் என்று அவரை நாங்கள் கேள்வி கேட்போம். அதற்கு அவர் பதில் சொல்லியாக வேண்டும்.

''அப்புறம், இங்குள்ள டாக்டர்கள் அனைவரும் இங்கே தினசரி நடக்கும் தொடர் கல்வி வகுப்பு (Continued Media Education) களுக்குக் கட்டாயம் வந்தாக வேண்டும். அதில் மருத்துவ உலகில் நேற்றைக்கு என்ன சாதனைகள் - கண்டுபிடிப்புகள் - நிகழ்த்தப்பட்டன என்பது பற்றி விரிவாக அலசப்படும். இதனால் எங்கள் டாக்டர்கள் அதிநவீன மருத்துவ அறிவு பெற்றவர்களாக இருக்கிறார்கள்.

''இறுதியாக எந்த நோயாளிக்கு எந்த விதமான உணவுகளை வழங்க வேண்டும் என்பதற்கான நிபுணர்களும் எங்கள் மருத்துவமனையில் இருக்கிறார்கள். அதன்படி எந்த நேரமும் தயாரித்துத் தருவதற்குக் கேண்டீன் வசதியும் எங்களிடம் உண்டு. இப்படிப்பட்ட காரணங்களால்தான் எங்கள் சிகிச்சையை அமெரிக்காவில் கிடைக்கும் சிகிச்சையோடு ஒப்பிடுகிறோம்!'' என்கிறார் சி.பி. வேலுசாமி.

இவற்றோடு இங்கு பயன்படுத்தப்படும் நோயாளிகளுக்கான துணிகள், பஞ்சுகள் ஆகியனவற்றை அப்படியே தூக்கி வெளியில் எறிந்தால் சுற்றுச்சூழல் கெடும் என்பதற்காக அவற்றை எல்லாம் (Incinerator மூலம்) எரித்துச் சாம்பலாக்கி விடுகிறார்கள். அதே போல் மருத்துவமனையிலிருந்து வெளியேறும் கழிவு நீரையும் இவர்கள் சுத்திகரிப்புச் செய்த பிறகு தான் வெளியே விடுகிறார்கள் என்கிற போது, நோயாளிகளை எந்த அளவுக்கு அக்கறையோடு குணப்படுத்துவார்கள் என்பதைச் சொல்லாமலே புரிந்து கொள்ளலாம்.

- இளங்கோவன்

ரூ. 1,500 முதல் பரிசுக் கதை

# ஒரு குடும்ப அடையைத் தேடாதீர்கள்...

குடிசை மூலையில் அவள் தோள் உயரத்திற்கு அடுக்கி வைத்திருந்த பானைகளில் ஒவ்வொன்றாய்க் கீழே எடுத்து வைத்துத் தேடினாள். கிடைக்கவில்லை. அடுப்பு மேட்டில், அஞ்சறைப் பெட்டியில், சுவரில் அடித்த ஆணியில் தொங்கும் மஞ்சள் பையில், உயரே இருந்த சிறிய ஜன்னலில், கூரை முகப்பில்... தன் குடிசைக்குள் ஓர் இடம் விடாமல் தேடிச் சலித்து நொந்து போய்ப் பக்கத்து வீடுகளில் விசாரித்தாள். கை விரித்தார்கள்.

வெளியே வேலி மரக்கிளையில் வாலைத் தூக்கிக் கொண்டு ஓடிய இரண்டொரு அணில்கள் கூட அவள் வரும் வரத்தைக் கண்டு கேள்விக்குறியாய் நின்று கீச்கீச் என்று கத்தின. பம்பரம் விளையாடிக் கொண்டிருந்த பரமசிவத்தின் காது திருகிக் கேட்டாள். தன் பிஞ்சுக் கைகளை அவனும் விரித்தான். அவனை நம்பாமல் வீட்டிற்கு இழுத்து வந்து, அவன் முதுகில் சுளீர் என ஒரு சூடான விசாரிப்பு... பாவம் அவன் அழ ஆரம்பித்தான். எப்படிப் போயிருக்கும்? எங்கே போயிருக்கும்? யார் எடுத்திருப்பார்கள்?

யோசித்து யோசித்து மனம் உலைந்து போன மருதாயி, தன்னிடம் அடிபட்டு அழுது கொண்டிருக்கும் மகன் பரமசிவத்தை ஆதரவாய்த் தன்னோடு சேர்த்து அரவணைத்து, மன்னிப்புக் கேட்பது போல் அவனைப் பார்வையால் வருடி... ஒத்தடம் கொடுப்பது போல் சிரித்து... அவனை மெல்ல மெல்லத் தன் வசப்படுத்தினாள். அவனும் தாயோரம் சமாதானமாய்ச் சாய்ந்தான்.

''அய்யா வந்திச்சா?''

அவள் யோசித்துக் கேட்டாள். அவன் தலையாட்டினான்.

மருதாயி ஒடுக்கிட்டுப் போனாள். ஊரே பார்க்க, தன்னைத் தெருத் தெருவாய் இழுத்துப் போட்டு அடித்து உதைத்து அலங்கோலப்படுத்தி விட்டு, இனி இவள் முகரையிலேயே விழிக்க மாட்டேன் என்று எல்லை வீரகாளியம்மன் மேல் சத்தியம் செய்து விட்டுப் போன மனுஷன் திரும்பவும் தன் குடிசைக்குத் தான் இல்லாத நேரம் வந்தானா?

பற்களைக் கடித்தபடி ஆத்திரப்பட்டுப் போய்க் கேட்ட தாயைக் கண்டு, மறுபடியும் பயந்து அழ ஆரம்பித்தான் பரமசிவம்.

''அழாத... எப்படா வந்துச்சு?''

''நீ வேப்பங்குளம் தாத்தாவைப் பார்க்கப் போன அன்னிக்கு...''

தான் போன நாளை மனத்துக்குள் தொங்கும் காலண்டரைப் பிடித்து நினைவால் தேதிகளைப் பின்னால் புரட்டினாள். ஞாயிற்றுக் கிழமை. முக்கு ரோட்டில் கசாப்புக் கடை முன்னால் ஆடறுக்கும் வரை காத்துக் கிடந்து, அறுத்தபின் அய்யாவுக்கு அரைக் கிலோ வாங்கிச் சென்ற நாள். மகன் பரமசிவத்தை வீட்டிலேயே விட்டு விட்டுப் போனது ஞாபகத்திற்கு வந்தது.

வே. குருநாதன்
(அறிமுக எழுத்தாளர்)

''வந்து வீட்ல எதையாச்சிலும் அய்யா எடுத்துச்சா? உனக்குத் துட்டு ஏதும் கொடுத்துச்சா?''

''எட்டணாக் கொடுத்துச்சு. அப்புறம் எதையோ தேடுச்சு... என்ன எடுத்துட்டுப் போச்சுன்னு எனக்குத் தெரியாதாத்தா...''

அவன் முதுகில் மறுபடியும் இரண்டு அடி. ''எப்பச் சொல்ற? சனியனே... வெளிய போ...''

அவனை வெளியே தள்ளிக் கதவைச் சாத்தி விட்டு, பின்னால் தொங்கும் சேலை முந்தானையை இடுப்பைச் சுற்றிச் செருகியபடி ஊருக்குள் நடந்தாள். பரமசிவம் அவள் பின்னால் அழுது கொண்டே ஓடினான்.

குடும்ப அட்டையைத் தன் புருஷன் தான் எடுத்திருக்க வேண்டும். எடுத்து ஊரில் எவர் வீட்டிலாவது அடகு வைத்திருப்பான். இந்தச் சனியன் பிடிச்ச கூப்பன் சீட்டை எத்தனை வீடுகளில் இருந்து எத்தனை தடவை மீட்டியிருக்கிறாள்! பாவி! பத்துக்கும் இருபதுக்கும் அடகு வைத்து, அந்த ரூபாயில் கண்மாய்க்கரை வேலிக் காட்டில் உட்கார்ந்து கள்ளச் சாராயம் குடித்து...

'ச்சய்.. இந்த மனுஷனுக்கு ஏன் வாழ்க்கைப்பட்டோம்? நாயக்கர் தோட்டத்தில் முதுகு வலிக்கக் குனிந்து களைவெட்டி, வியர்வையில் குளித்து, வெயிலில் கருகி, வாங்கும் பத்து ரூபாய்த் தாள்களில் எத்தனை தாள்கள் கூப்பன் சீட்டை மீட்டுவதற்காகவே ஊருக்குள் பறந்திருக்கின்றன!

கண்மாயில் வேலி மரக் காடுகளில் கறுப்புக் கேனும் கண்ணாடிக் கிளாசுமாய் உட்காரும் கருப்பனைத் தான் உயிரோடு கொளுத்தி விட்டால் என்ன? பாவி என் குடியை நாசமாக்கப் பிறந்திருக்கானே.. விளங்குவானா..?'

"கேடி பக்கிரி இறந்ததுக்கு ஏட்டு ஏகாம்பரம் இப்படி அறிக்கை விட்டிருக்க கூடாது!"

"எப்படி அறிக்கை விட்டார்?"

"கேடி பக்கிரியின் மறைவு போலீஸ் துறைக்கே மாபெரும் இழப்புனு அறிக்கை விட்டிருக்காரே!"

- எஸ். மூகம்
மது யூசுப்.



வயிற்றில் அடித்து அழுது கொண்டே வடக்குத் தெரு வந்தாள். நேராய் வேலுப்பிள்ளை வீட்டு முன்னால் வந்து நின்று தயக்கமாய் வாசல் படியை நெருங்கி, தாழ்வாரத் தூண் ஓரம் சாய்ந்தபடி, திண்ணையில் ஈசிசேரில் சாய்ந்திருக்கும் பிள்ளையின் முன்னால் தலையைச் சொறிந்தாள். வளைந்து நின்றாள். சிரமப்பட்டுச் சிரிப்பை வரவழைத்தாள்.

''என்ன புள்ள? என்ன விசயம்?'' - வேலுப்பிள்ளை இறுகிப் போன முகத்தோடு கேட்டார்.

''சாமீ... இந்தக் கூப்பன் சீட்டு... என் புருஷன் கொடுத்திச்சா?''

''ஆமா... கொடுத்துட்டுப் பத்து ரூபா வாங்கிட்டுப் போயிருக்கான் புள்ள. கொண்டு வந்திருக்கியா?''

மகளின் காய்ந்து போன தலைக்குள் விரலை அலைய விட்டு ஒரு பேனைப் பிடித்து நகத்தில் குத்திக் கொன்று விட்டு, மீண்டும் அவள் தலைக்குள் விரலை அலைய விட்டபடி... பிள்ளை வீட்டின் முன்புறம் மாட்டப்பட்டிருந்த போட்டோக்களைப் பார்த்துக் கொண்டே மருதாயி யோசித்தாள். பத்து ரூபாய்க்கு எங்கே போவது?

''சாமீ... இப்ப ரூவா இல்ல... அரிசி போடுதாகளாம் கூப்பன்ல... அத வாங்கியாரத்தான் ரூவா வச்சிருக்கேன்.. கொடுங்க... அரிசி வாங்கிட்டு திரும்பவும் சீட்டை உங்க கையிலேயே தந்திருதேன்... பத்து ரூபா கொடுத்திட்டு சீட்ட வாங்கிக்கிடுதேன்... இன்னமும் கஞ்சி வடிக்கல சாமி... வயித்துப் பசி... இந்தப் பயலும் பட்னியாக் கெடக்கான்...''

வாடித் துவண்டு போன வாழைக் கன்றாய்த் தன் இடுப்புயரம் நின்ற தன் பிள்ளையின் தலையைப் பாந்தமாய் வருடி விட்டு, பிள்ளையிடம் கலங்கிய கண்களால் மனு எழுதிக் கொடுத்து மயங்கி நின்றாள்.

''அரிசி நாளு நாளைக்குப் போடு வாங்க புள்ள... நீ நாளைக்கு வந்து உன் சீட்டை வாங்கிக்கோ... எங்கேயோ வச்சிட்டேன்.. தேடி எடுத்துட்டு வச்சிருக்கேன்.. நீ ஒரு பத்து ரூபாயக் கொண்டுட்டு நாளைக்கு வா.. போ...''

வேலுப்பிள்ளை, தன் குரலில் கடுமையைச் சேர்த்து அவளை வாயால் விரட்டினார். பாவம் மருதாயி! மறு வார்த்தை சொல்லத் தைரியம் இல்லாமல் திரும்பி நடந்தாள்.

போர்க்களத்தில் இன்று போய் நாளை வா என்ற சொல் கேட்டுத் தோற்றவளாய் மகனோடு நடந்தாள்.

வேலுப்பிள்ளை ரேஷன் கார்டுகளுக்குச் சீனி வாங்கி, மளிகைக் கடையில் கிலோவுக்கு இரண்டு ரூபாய் லாபத்திற்கு விற்று, ரூபாய் எண்ணுவதில் திறமைசாலி. அதனால் குடும்ப அட்டைகளை வீட்டுக்கு



மருதாயிக்குத் தலையில் இடி விழுந்தது போலிருந்தது. தனக்குண்டான அரிசியை அவள் வாங்கி விட்டாளே... சாப்பிடப் போகும் நேரம் தட்டிப் பறித்தது போலிருந்தது. ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

வீடு வேட்டையாடுவதிலும் ஒரு திறமையைத் தேடியிருந்தார். அவர் முகராசிக்கு அநேக சீட்டுகளும் அகப்படும்.

மாரிமுத்து அடகு வைத்த சீட்டில் சீனி வாங்கிக் கொண்டு, அதிலேயே அரிசி வாங்கவும் மணியக்காரர் மனைவிக்குக் கொடுத்து, அவள் தந்த சீட்டிற்கும் சீனி வாங்கிக் கொண்டார். ஆனால் மாரிமுத்துவின் மனைவி இவ்வளவு சீக்கிரமாய் சீட்டைக் கேட்டு வருவாள் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

'என் பொஞ்சாதிக்குத் தெரியாமத்தான் எடுத்துட்டு வந்தேன் மகராசா... அவளாத் துட்டாத் தூக்கிக் கேட்டு வந்தா... பத்து ரூபா வாங்கிக்கிட்டு கொடுங்க... இல்லாட்டி வேண்டாம். நான் மீட்டிக்கிடுதேன்...'

மாரிமுத்துவின் பழைய வாக்குமூலம் தான் வேலுப்பிள்ளைக்கு அவ்வளவு தென் பூட்டியிருந்தது. பாவம் மருதாயி! பத்து ரூபாய்க்காக மதியம் வரை ஊருக்குள் அலைந்தாள். ஒவ்வொரு வீடாய் ஏறி இறங்கினாள்.. கடைசியில் கால் உலைந்து மனம் உலைந்து கண்மாய்க்கரைக்கே வந்தாள்.

''ஏலேய்... கருப்பா... எடுபட்டவனே.. நீ நல்லாயிருப்பியா? இந்த இழ

வெடுத்த சாராயம் காச்சிக் காச்சி என் குடியக் கெடுத்துட்டியேடா... நீ இடைவழி யிலதான் போவடா.. நாசகாரப்பாவி...''

ஓடை மண்ணை இரு கையாலும் அள்ளித் தூற்றினாள்.

''போறியா... வந்து தூக்கிப் போட்டு சங்கு ஏறி மிதிக்கவா? தொழில் நடக்குற இடத்துல வந்து என்ன பெரிசாக் கூப்பாடு போடுத? நாயீ...''

கருப்பன் உறுமினான்.

மனைவியைச் சொன்னதுமே மாரி முத்துவுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. ஆனால் அவனிடம் மோத முடி யாதே... இனி அடுத்த கிளாஸ் பாக்கி சொல்லிக் குடிக்க வேண்டுமே...

மனைவியைப் பார்த்து ஓடி வந்தான். ''போஈ... மானங்கெட்டவளே.. இங்க வரச் சொன்னதாரு உன்னை.. என்னைக் கேவலப்படுத்தவா இந்த இடத்துக்கெல் லாம் வாற? போஈ...''

ஓங்கி அவள் வயிற்றில் உதைத்துத் தள்ளினான். பாவம். உழவுக் கட்டிகளில் மல்லாந்து விழுந்த மருதாயி மேல் பதறி விழுந்து கத்தினான் பரமசிவம். போதை தெளியாத மாரிமுத்து, திரும்பிப் போய் கருப்பனின் கால்மாட்டில் நன்றியுள்ள நாயாய் உட்கார்ந்து கொண்டான்.

''மன்னிச்சிருங்க தலைவரே.. அவ பேசினதை எல்லாம் மனசில வைக்காதீக... புத்தி இல்லாமப் பேசுறா..''

கிளாஸை நீட்ட அவன் சிரித்துக் கொண்டே ஊற்றினான். மதுவின் அடி மைக்கு மனைவி மக்கள் எல்லாம் எம்மாத் திரம்? தன்னையும் தன் மானத்தையும் கூட சாராயத் துளிகளுக்கு ஏலம் விட்டவனுக்கு தாயின் மானத்தையும் தாரத்தின் மானத்தை யும் கூட நினைத்துப் பார்க்க நேரமா இருக் கும்?

மருதாயியை ஒரு கிளாஸிலேயே மறந்து போனான் மாரிமுத்து. பாவம் அவள் பரமசிவத்தோடு ஊரை நோக்கி நடந் தாள். வழியில் எல்லை வீரகாளியம்மன் கோவில் முன்னால் கால் மடக்கி விழுந்து, நிலத்து மண்ணை நெற்றியில் பூசினாள்.

''பரமசிவம்... அய்யாவ மாதிரி நீ குடிக்கக் கூடாதுப்பா.. சாகிற வரைக்கும் அந்த இடத்துக்கே போக மாட்டேன்னு இந்தக் காளியாத்தா மேல சத்தியம் பண் ணிக் கொடு...''

கைநீட்டிய அவளிடம் அந்தப் பிஞ்சுப் பயலும் சத்தியம் செய்து கொடுத்தான். வாரி அணைத்து உச்சிமோந்தபடி ஊருக்குள் போனாள்.

''என்ன மருதாயி... விடிஞ்சதிலே இருந்து ஊருக்குள்ள அவதி அவதியா அலையுதே? என்ன விசயம்?''

மணியக்காரர் மனைவியே விசாரித் தாள். மருதாயி சொன்னாள்.

''அட பாவிப் பய புள்ள... உன் வீட்டுல நான் அரிசி வாங்கிட்டேனே. வேலுப் புள்ளதான் தந்தாரு...''

மருதாயிக்குத் தலையில் இடி விழுந்தது போலிருந்தது. தனக்குண்டான அரிசியை அவள் வாங்கி விட்டாளே... சாப்பிடப் போகும் நேரம் தட்டிப் பறித்தது போலிருந் தது. ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. மணியக்காரர் மனைவியாயிற்றே... தடிதடி யாய்ப் பையன்கள். தாய்க்குச் சோறு போட மனமில்லாமல் தனித்தனியாய்க் குடியிருந் தாலும் தாயிடம் நியாயம் கேட்கும் ஆளைக் கூட அடித்துச் சாய்ப்பதில் மட்டுமே தாய்ப் பாசம் காட்டுபவர்கள்... தெருத் தெருவாய் ஓட விட்டு அடிக்கும் மிருகங்கள்.

கோபத்தை அடக்கினாள் மருதாயி. தன் கூப்பன் வீட்டுக்கு வாங்கி அனுபவிக்க இவர்களுக்கெல்லாம் என்ன உரிமையிருக் கிறது? பச்சைத் தண்ணீர் கேட்டால் கூட குனிந்து நின்று கைவிரிக்கச் சொல்லி, கையில் பாதி முகத்தில் பாதி என்று ஊற்றிச் சாதித் திமிரைக் காட்டுவார்களே... தான் தொட்டுப் புழங்கிய ரேஷன் கார்டை மட்டும் எப்படி பூட்டி வைக்கலாம்? நான் கேவலம்... என் குடும்பம் கேவலம்... என் குடும்ப அட்டையை மட்டும் கண்ணில் ஒத்திக் கொள்கிறார்களே...

மருதாயி மனசுக்குள் இவ்வளவும் பேசி மாய்ந்து போனாள். கடைசியாய் ரேஷன் அரிசி வாங்க வைத்திருந்த பணத்தில் அதே அரிசியை இரண்டு மடங்கு விலை கொடுத்து உள்ளூர்க்கடையில் வாங்கிப் போய்.. உலையில் போட்டு வடித்து... ஒரு வாறு பரமசிவத்தின் பசியைத் தணித்தாள்...

## அருள்வாக்கு

நாமாகவே தெரிந்து கொள்வதை விட, அதாவது புஸ்தகம் படித்தும் ஸ்வய அநுபவங்களாலும் மட்டும் தெரிந்து கொள்வதை விட குருமுகமாகத் தெரிந்து கொள்வதில் என்ன சிறப்பு என்றால், நாமாகத் தெரிந்து கொள்ளும் போது, 'இவ்வளவு படித்தோம், இப்பேர்ப்பட்ட விஷயங்களை நம்முடைய அநுபவத்தா லேயே தெரிந்து கொண்டோம்' என்ற அஹங்காரம் ஏற்பட இடமிருக்கிறது. புஸ் தகப் படிப்பும் வேண்டியதுதான். குருவே புஸ்தகத்திலிருந்தும் உபதேசிக்கிறார். 'இது இது இன்னும் படி' என்றும் சொல்வார். அதே மாதிரி, அல்லது அதை விடவும், ஸ்வய அநுபவத்தாலும் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். குரு உபதேச மெல்லாமும் ஸ்வாநுபூதியில் கொண்டு விடுவதற்குத்தானே? ஆனால் அப்படி ஒரு



பெரியவரின் துணை, guidance இல்லாமல் தாமாகப் படிப்பு, அநுபவம் என்று போகும் போது, (தலையைத் தொட்டுக் காட்டி) கனத்துப் போகிற அபாயம் இருக்கிறது. குரு என்று ஒரு பெரியவரை வரித்து விட்டால் அவரிடம் அடங்கியிருப்பது, சுச்ருஷை செய்வது என்று இருப்பதில் ஆத்மாவுக்கு மிகவும் ஹானிகரமான இந்த அஹங்காரம் அப்படியே நசிக்க வசதி ஏற்படுகிறது. வெறும் புத்திவ்ருத்தியாய் மட்டும் எல்லாம் முடிந்து போய் விடாமல், அன்பு, தொண்டு ஆகியவற்றால் உள்ளம் பக்குவமாகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக புஸ்தகத்தில் சொல்லியிருக்கிறதும், மூளை லெவலில் மட்டும் புரிகிறதுமான தத்வங்கள், ஒரு அநுபவியின் மூலம் அவருடைய நிறைந்த அநுக்ரஹ சித்தையோடு உபதேசமாக வரும் போது ஜீவனுள்ள சக்தியாக நமக்குள் போய் நம்மையும் ஸத்ய அநுபவத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறது. அந்தப் பெரிய அநுபவம் தனக்கு ஏற்படுவதிலும் சிஷ்யன் அஹங்காரப்பட முடியாது. ஏனென்றால் அஹங்காரம் நாசமாகி ஆத்மா மாத்திரம் பிரகாசிப்பதுதான் அந்த அநுபவமே! அதற்கு குருவின் அநுக்ரஹம் ரொம்ப அவச்யம்.

எல்லோரும் முடிந்த அளவு குரு பக்தி செய்து ச்ரேயஸை அடைய வேண்டியது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

ஒரு வாரம் தொடர்ந்து வேலைக்குப் போனாள். பத்து ரூபாய்த் தாளோடு வேலுப்பிள்ளை வீட்டிற்குப் போனாள்.

''இந்தாங்க சாமி... பத்து ரூபா. சீட்டைக் கொடுங்க...''

வேலுப்பிள்ளை ரூபாயை வாங்கித் தலைக்கு மேல் தூக்கிப் பிடித்து உற்றுப் பார்த்து விட்டு, மடியில் கட்டிக் கொண்டு தட்டுத் தடுமாறி உள்ளே போய்... பழைய மரப் பீரோவிற்குள் ஒரு நிமிடம் கை விட்டுத் துழாவி... சீட்டோடு வெளியில் வந்தார்.

''இந்தா புள்ள... இனி சீட்டுக் கேட்டு வராத.. தந்தாச்சு...''

''இத ஏன் அவசரப்பட்டு இன்னொருத்தருக்கு அரிசி வாங்கத் தாறீக சாமீ... நானும் என் மகனும் மண்ணையா தின்போம்... சர்க்காரு தர்ற அரிசியைக் கூட ஏன் சனியன் போல நீங்க தட்டிப் புடுங்குறீக... என் புருஷன்தான் குடிகாரப்பய... கூப்பன் சீட்டைக் கொண்டாந்து அடகுவைச்சான்னா... அவன் முகரையில எறிய வேண்டியதுதான.. ஏன் வாங்கிக்கிட்டுக் காசு கொடுத்து அனுப்புறீக... இப்படிக் கொடுக்க இரண்டு பேரு இருக்கப் போய்த்தான அவன் குடிச்சு நாசமாப் போறான்...''

''செருப்புப் பிஞ்சு போகும்... அறிவு கெட்ட பயபுள்ள... சீட்ட வாங்கிட்டல்ல. ஓடிப்போ நாய் போல... எனக்குப் புத்திமதி சொல்றியோ...'' - என்று இன்னமும் அசிங்கமான வார்த்தைகளால் அவளுக்கு அபிஷேகம் செய்து விட்டு அடிக்கவும் ஓடி வந்தார் வேலுப்பிள்ளை.

ஆளாளுக்கு அவளைத்தான் விரட்டியடித்தார்கள். கண்ட கண்ட வார்த்தைகளால் காறித் துப்பினார்கள்.

''பேசுங்கய்யா. பேசுங்க... நீங்க பேசவும் நாங்க கேட்கவும்தான உங்க பாட்டான் மாருக இந்த சாதி வசதி பண்ணி வச்சிட்டுப் போயிருக்காக... எத்தனை தலைமுறைக்குத் தான் இப்படிப் பேசுவீகன்னு பாப்போம். கள்ளச் சாராயம் வாங்கி ஊத்துனா கட்டுவைக் கூட கடையில கொண்டு போய்ப் போடுற பாவிப்பய என்னோட இருக்கான். நீங்க ஏன் பேச மாட்டீக...''

மருதாயி அழுது கொண்டே வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். அடுப்பு முன்னால் உட்கார்ந்து, ரேஷன் கார்டையே வெறித்தாள். என்ன நினைத்தாளோ... திடீரென்று அதை இரண்டாய், நான்காய், எட்டாய்... பதினாறாய்க் கிழித்து... அடுப்புக்குள் எறிந்தாள். அக்கினி அதிக ஆவேசமாய் எரிந்தது. அதை விட ஆவேசமாய் அவள் வயிறு எரிந்தது.

இனிமேல்.. அரிசி, கோதுமை, மண்ணெண்ணெய் எதுவும் கிடைக்காது. வேட்டி சேலை கிடைக்காது. மாரிமுத்து வலிய வந்து தன்னை வசப்படுத்தி அவள் பசியைத் தணித்துக் கொண்டு போனாலும் பிரசவ உதவிப் பணம் கிடைக்காது. அரசாங்கம் காட்டும் ஒவ்வொரு கருணையும் இனி தன்னை விட்டுத் தள்ளியே நிற்கும்.. பரவாயில்லை.

என் வியர்வையில் நான் பிழைத்துக் கொள்வேன். என் பிள்ளையையும் காப்பாற்றுவேன். இந்தச் சீட்டு வேண்டாம். இதை இனி அவன் ஒவ்வொரு தடவையும் அடகுவைத்துக் குடிக்க முடியாது. அந்தச் சீட்டிற்காகவே அவனுக்கு வாங்கித் தரப்படும் சாராய தம்ளர்கள் குறையும். கொஞ்ச நஞ்ச மனுஷனாய் மட்டுமாவது அவன் ஊருக்குள் மிஞ்சுவான். அது போதும் என்று கண்ணீரைத் துடைத்து விட்டு ஒரு புதிய தெம்போடு அடுப்பு மூட்டத் தொடங்கினாள் அவள்.



* எப்போதும் கூட்டம்தான்!

‘அமெரிக்கா, லண்டன், சிங்க
எல்லாம் போனால், ஷாப்பிங் செய்
ரொம்ப இனிமையான அனுபவம்.
கண்டிஷன் சுகம். எக்கச்சக்க ‘சாய்ஸ்’.
சிப் முதல் பெட்ஷீட் வரை; கடுகு மு
கறிகாய் வரை எல்லாம் ஒரே கட்டடத்
வேண்டியதை எடுத்து டிராலியில் ே
டுக் கொண்டு, கவுண்ட்டரில் கிரெடிட்
டோ பணமோ கொடுத்து விட்டு வ

# சூப்பர் மார்க்கெட்



* கண்ணைக் கவரும் பொருள்களின் அணிவ



* ஏதாவது கிடைக்குமா என்று
எட்டிப் பார்க்கும் பாப்பா...

யாக வரலாம்!’ என்று சுவாரசியமாகச் சொல்லுகி
இருக்கிறார்கள்.

இப்படி எல்லாம் சொல்பவர்களிடம், ‘அதெல்
சாத்தியம்தான்’ என்று நாமும் சொல்ல முடியும்.
நிலையைப் புரிந்து கொண்டு, அவர்களைத் தி
மார்க்கெட்டுகள் பல சென்னையில் நிறையவே இ

## அப்பாவின் நினைவாக :

பூந்தமல்லி நெடுஞ்சாலையில், ஈகா தியே
எம்.வி.ஜே. டவர்ஸ் சூப்பர் மார்க்கெட்டுக்கு, ஒரு
தான முன்னேற்றம் பின்னணியாக இருக்கிறது.

எளிமையான பள்ளிக்கூட ஆசிரியராக வாழ்க்
எம்.வி. ஜெயராமன். பின்நாட்களில் பல பொறியி

ஞூரில் ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்தி வந்தவர். ஒரு ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் கட்டி விட்டால், ஏராளமாக வாடகை வரும் என்று பலர் சொல்லியும் கேட்கவில்லை. வாடகைக்கு விடுவது பெரிய விஷய மில்லை; இவரை பொதுமக்கள் நினைவில் வைத்துக் கொள்ளுகிற மாதிரி, அவர்கள் வாழ்க்கையோடு இணைந்து போன சூப்பர் மார்க்கெட் வர்த்தகத்தை தாமே நடத்த வேண்டும் என்று தீர்மானித்தார்.

''எந்த மாதிரியான வாடிக்கையாளர் கள் உங்களிடம் வருகிறார்கள்?'' என்று நிர் வாகப் பொறுப்பில் இருக்கும் அவர் மகள் லலிதா சுகுமாரிடம் கேட்டோம்.

''உயர்-மத்தியதரக் குடும்பங்களும் உண்டு; மத்திய தரக் குடும்பங்களும் உண்டு. டன்லப், இந்துஸ்தான் மோட் டார்ஸ், டி.வி.எஸ். நிறுவனங்கள் என்று சில மொத்த வாடிக்கையாளர்களும் இருக்கி றார்கள். 500 ரூபாய்க்கு மேல் பொருள்கள் வாங்குகிறவர்களுக்கு மூன்று சதவிகிதம் டிஸ்கவுன்ட் கொடுக்கிறோம். கிரெடிட் கார்டுகளை அங்கீகரித்துப் பொருள்கள் கொடுக்கும் போது, உடனடியாகப் பணம் தருபவர்களுக்கு டிஸ்கவுன்ட் கொடுத்தால் என்ன?''

கம்பெனிகள் அவ்வப்போது அறிவிக் கும் சலுகைகளையும், வாடிக்கையாளருக் குக் கொடுப்பது உண்டு. 12 வாங்கினால் ஒன்று இலவசம்... மூன்று பெட்டிகள் வாங் கினால் 5 ரூபாய் தள்ளுபடி.... என்றெல்லாம் சலுகைகள் இல்லையா? அது மாதிரி.

எல்லாச் சாமான்களையும் ஒட்டுமொத் தமாக வாங்கி இடத்தை அடைத்துக் கொள் வதில்லை. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை அல்லது தேவைப்பட்டால் வாரத் துக்கு ஒருமுறை பட்டியல் எடுத்து வாங்கி விடுகிறார். சுத்தம் செய்ய வேண்டியவற் றைச் சுத்தப்படுத்தி, 'பாக்' செய்ய வேண்டி யதை 'பாக்' செய்து விடுகிறார்.



* நடராஜன்



* பண்டாரி

''நிறைய முதலீடு செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லையாமே?''

''விளக்குகள், 'ராக்'குகள், உள் அமைப்பு என்று ஆரம்பத்தில் முதலீடு செய்ய வேண்டும். ஹார்லிக்ஸ், ப்ரூக் பாண்ட், நெஸல்ஸ் மாதிரியான 'பிராண்ட்டட்' பொருள்களுக்கு 15 நாட் களுக்குள் பணம் கட்டி விட வேண்டும். மற்றப் பொருள்களுக்குச் சுமார் ஒரு மாத அவகாசம் உண்டு.''

விளையாட்டுப் பொம்மைகள் விடு முறை சீசன் போது நிறைய விற்குமாம். பரிசுப் பொருள்கள் விற்பனை பெரும்பா லும் கல்யாண சீசனின் போதுதான்.

''ரெடிமேடு ஆடைகள் விற்பனை செய்யும் எண்ணம் இருக்கிறது. ஆனால் தற்சமயம் வேண்டாம் என்று இருக்கி றோம். முதல் மாடியில் ஃப்ரிஜ், டீவி, எல் லாம் சகோதரர் ரமணி பார்த்துக் கொள்ளு கிறார்!'' என்றார் லலிதா சுகுமார்.

## ரசுத்துக்கு ஒரு பழம் :

ராதாகிருஷ்ணன் சாலையில் இருக்கும் நீல்கிரீஸ் சூப்பர் மார்க்கெட்டுக்குள் போவ தற்கு முன்னால், இடப்புறம் உள்ள பழக் கடையிலிருந்து வரும் மாம்பழ வாசனை, மூக்கைப் பிடித்து முகத்தைக் கடையின் பக்கம் திரும்ப வைக்கிறதில்லை?

ரத்னகிரி மாம்பழம்; ஷோலாப்பூர் மாதுளை; திண்டுக்கல் வாழைப்பழம்; சிம்லா ஆப்பிள்; திருச்சூர் அன்னாசிப் பழம்...

''சூப்பர் மார்க்கெட்டுக்கு வர்றவங்க எல்லாம் இங்கயும் வரதுண்டு! அந்தந்த சீசன்ல கெடைக்கற பழம் எல்லாமே இங்கே கெடைக்கும்!'' என்கிறார் கடைக் காரர்.

### காட்டிக் கொடுக்கும் கம்ப்யூட்டர் :

பெருமாள் கோயில் முன் வைகுண்ட ஏகாதசியன்று நிற்கும் க்யூ. அல்லது ரஜினி பட ரிலீஸ் அன்று தியேட்டர் வாசலில் காத்திருக்கும் க்யூ. இத்துடன் இன்னொரு உதாரணத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அது, எப்போதுடா மணி நாலு ஆகும், வாசல் கதவைத் திறப்பார்கள் என்று பொறுமையோடு, நீல்கிரீஸ் சூப்பர் மார்க்கெட் முன் காத்திருக்கும் சின்ன க்யூ.

''ஷாப் லிஃப்டிங் பற்றி ஆங்கில வார இதழ் ஒன்று சமீபத்தில் விரிவாக எழுதியிருந்தது. நம்பவே முடியவில்லை. இங்கே எப்படி...?''

சொன்னார் பொது மேலாளர் நடராஜன் :

''க்ளோஸ்ட் சர்க்யூட் டீவி இங்கே வைத்திருக்கிறோம். அதை விநாடி விடாமல் பார்த்துக் கொண்டே இருக்க முடியாதே? ஆனாலும் அது இருக்கிறது என்கிற பயத்திலேயே பலர் ஷாப் லிஃப்டிங் செய்ய மாட்டார்கள்! சூபர்வைசரும் இருக்கிறார்...''

''அப்படி இருந்தும்...?''

''திருடிப் போக வேண்டும் என்றே வருகிறவர்களும் உண்டு. நன்றாக டிப்டாப்பாக டிரஸ் செய்து கொண்டு வரும் 'க்ளெப்டோமேனியா'க்களும் வருவதுண்டு. அவர்கள் அவ்வப்போது பிடிபடுவதும் உண்டு.''

அழகாக, பொருள்கள் வாரியாக, அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் நேர்த்தி, வியாபாரச் சுறுசுறுப்பு, காண்பிக்கும் பரிவு இவை பளிச்சென்று தெரிகின்றன.



* லலிதா சுகுமார்



''கிரெடிட் கார்டுகள் ஏற்றுக் கொள்ளுகிறீர்களா? அதில் சிரமம் ஏதும் கண்டிருக்கிறீர்களா?''

''கிரெடிட் கார்டுகளை ஏற்றுக் கொள்ளுகிறோம். கம்ப்யூட்டருடன் வங்கியை இணைத்திருக்கிறோம். கம்ப்யூட்டரில் அனுமதி கிடைத்த பிறகே அதை ஏற்கிறோம். 'தகுதி நிலையைத் தாண்டியாகிவிட்டது. கிரெடிட் கார்டை ஏற்றுக் கொள்ளாதே' என்ற குறிப்புக் கிடைத்தால் ஏற்பதில்லை. வாரா வாரம் வங்கிக்கு லிஸ்ட்டை அனுப்பி வைத்து விடுகிறோம்...''

'நீல்கிரீஸ்' கேக்குகளுக்குப் பெயர் பெற்றது. ''கிறிஸ்துமஸ், புத்தாண்டு போன்ற பண்டிகைகளின் போது பிரம்மாண்டமான கேக் செய்து பரிசுச் சீட்டு 3 ரூபாய், 5 ரூபாய் என்று வைத்து விடுவோம். 1500 ரூபாய் விலையுள்ள அந்த கேக்கை யாருக்குச் சீட்டு வருகிறதோ அவருக்குக் கொடுத்து விடுகிறோம்!''

1905ல், வெறும் வெண்ணெய் மட்டுமே விற்கத் தொடங்கி, பிறகு பால், மளிகைச் சாமான்கள் என்று பல மாடிக் கட்டடமாக உயர்ந்து நிற்கும் இந்த சூப்பர் மார்க்கெட்டின் முதல் இரண்டாம் மாடிகளில் ரெஸ்டாரன்ட்டும், தங்கும் அறைகளும் தயாராகி வருகின்றன. ''லைசன்ஸ் கிடைத்ததும் ஆரம்பித்து விடுவோம்!'' என்கிறார் நடராஜன்.

''அண்ணா நகரிலிருந்து இங்கே வாடிக்கையாக வருகிறவர்கள் உண்டு. காஞ்சீபுரத்திலிருந்து ஒரு டாக்டர் வாரம் தவறாமல் சனிக்கிழமை அன்று வருவார். பாண்டிச்சேரி அரவிந்த ஆசிரமத்திலிருந்து வந்து ஒவ்வொரு வாரமும் சாமான்கள் வாங்கிக் கொண்டு போவார்கள். சினிமா நட்சத்திரங்கள் பலரும் இங்கே வருவது உண்டு. நிறைய அயல்நாட்டுக்காரர்களும் வருகிறார்கள். ஆனால் எங்களைப் பொறுத்த வரை எல்லா வாடிக்கையாளர்களும் எங்களுக்கு ஒரே மாதிரிதான்!''

### 'வாடிக்கையாளர் சொன்னால் வாங்கி வந்து விடுவோம்' :

லஸ் முனையில் உள்ள 'விடான்' சூப்பர் மார்க்கெட்டில், பழங்கள், காய்கறிகள், பழச்சாறு, ஃபாஸ்ட் ஃபுட் என்று ஏக ஜட்டங்கள். கம்பெனிகள் அவ்வப்போது



வழங்கும், அல்லது அறிமுகப்படுத்தும் பொருள்களைப் பற்றி எடுத்துச் சொல்லும் பணிவான விற்பனையாளர்கள்.

''மளிகைச் சாமான்கள் எங்கள் விற்பனையில் கிட்டத்தட்ட 50% - காரணம் அரிசி, பருப்பு முதல் எல்லாவற்றையும் சுத்தப்படுத்தி, நேரிடையாக எடுத்து உபயோகிக்கும் அளவுக்கு நாங்கள் கொடுப்பதுதான்!'' என்றார் மானேஜிங் டைரக்டர் பண்டாரி. அதற்காக, அவர் இருக்கும் மாடியிலேயே ஒரு தளம் முழுக்க ஒதுக்கியிருக்கிறார்.

''இப்படி மூன்றாம் மாடிக்கு சாமான்களைக் கொண்டு வருவது சிரமம் இல்லையா?''

''சிரமம்தான். ஆனால் எனது நேரடி மேற்பார்வையில் இது செய்யப்பட்டால் தான் எனக்குத் திருப்தி!''

''பம்பாயிலோ, தில்லியிலோ இன்ன பொருள் கிடைக்கிறது. இங்கேயும் வாங்கி வைப்பதுதானே என்று வாடிக்கையாளர்கள் சொல்லி, அவற்றை நீங்கள் வரவழைப்பது உண்டா?''

''தாராளமாக. வாடிக்கையாளர் குறிப்பிடும் பண்டங்களை, எப்படியாவது அவர் அடுத்த முறை வரும் பொழுது கிடைக்கிற மாதிரி செய்வதுண்டு. வெறும் பேச்சுக்காகச் சொல்லவில்லை; வாடிக்கையாளரின் திருப்தி எனது குறிக்கோள்.... பல பத்திரிகைகள் படிக்கிறவன் நான். அவற்றில் விளம்பரப்படுத்தப்படும் பொருள்கள் இங்கேயும் கிடைக்க வேண்டும் என்பதற்காக உடவே எழுதி வரவழைப்பதும் உண்டு.''

'விட்டா'வுக்கு இன்று ஆறு வயது. மாதம் மூன்று லட்ச ரூபாய்க்கு மட்டுமே இருந்த ஆரம்ப வருட வியாபாரம், இன்றைக்குச் சுமார் அறுபது லட்ச ரூபாயைத் தொட்டிருக்கிறது.

எல்லா 'கவுன்ட்டர்க'ளிலும் சேல்ஸ் கேர்ல் இருப்பதால் திருட்டுப் போகாமல் கண்காணிக்க முடிகிறதாம். ''ஆனால் நாம் கண்காணிக்கப்படுகிறோம் என்பதை அறியாமலே செய்வதுதான் அதிகம். பெரும்பாலும் டாஃபிக்களும், சாக்லேட்டுகளும் திருடு போவதுண்டு. பிடிபடும் 'வாடிக்கையாளரி'ன் பெற்றோரை அழைத்து நல்ல வார்த்தை சொல்லி அனுப்புவோம்!'' என்கிறார் பண்டாரி.

மளிகைச் சாமான்களையடுத்து, அதிக விற்பனை ரெடிமேடு ஆடைகளும், துணி வகைகளும்தாம். அதற்கடுத்த இடம் பரிசுப் பொருள்களுக்கும், விளையாட்டுப் பொம்மைகளுக்கும்.

''நாங்கள் ஆல்மோஸ்ட் தினசரி என்கிறாப் போல் இங்கே வருவதுண்டு. எது தேவையோ அதை வாங்கிக் கொள்ளுவோம்!'' என்றார்கள் ஓர் இளம் தம்பதியினர். ''ஷாப்பிங் ஒரு பிளசன்ட் அனுபவம்!'' என்பது இவர்கள் கணிப்பு.

## ஷோ பிஸினஸ் - டு சூப்பர் மார்க்கெட் :

சுமார் எட்டு மொழிகளில் திரைப் படம் தயாரித்த ஒரு வெற்றிகரமான சினிமா தயாரிப்பாளர் ஏ. பூர்ண சந்திரராவ்.

கோபதி நாராயணசாமி சாலையில் உள்ள 'லட்சுமி லாண்ட்' சூப்பர் மார்க்கெட்டை இவர் ஆரம்பித்ததன் பின்னணியை, சுவாரசியமாகச் சொன்னார் :

''இந்த இடம் விற்பனைக்கு வருகிறது என்று நண்பர்கள் சொன்ன போது, வாங்கி விடலாம் என்று தீர்மானித்தேன். அப்போது இந்த சூப்பர் மார்க்கெட் ஐடியா எனக்கு இருக்கவில்லை.

''என்னுடைய மகன் ஸ்ரீதர் இருக்கிறானே, அவன் ரொம்ப சங்கோஜமான, ஷை டைப். பதினேழு வயது. 88ல், ஒரு ஐநூறு டாலரைக் கையில் கொடுத்து, உலகம் முழுதும் சுற்றி வர ஒரு டிக்கெட்டும் வாங்கிக் கொடுத்து, 'வெளியில் நன்றாகச் சுற்றி மனிதர்களிடம் பேசிப் பழகி ஒரு முழு மனிதனாக நீ வந்து சேர்' என்று அனுப்பி வைத்தேன்.

''அமெரிக்கா போனவன் அங்கே சிகாகோவில் போய்த் தங்கினான். ஒரு நாள் போன் பண்ணி, 'நான் இங்கே ஒரு சூப்பர் மார்க்கெட்டில் வேலை பார்க்கிறேன். கவலைப்பட வேண்டாம்' என்றான். என் மனைவிக்கு அவன் மீது பாசம் அதிகம். 'நீ இங்கேயே வந்து விடேன்!' என்று கேட்டுக் கொண்டாள். 'நீங்கள் இதே மாதிரி ஒரு சூப்பர் மார்க்கெட் அங்கே ஆரம்பிப்பதாக இருந்தால் வருகிறேன்' என்று கண்டிஷன் போட்டான். சரி என்று சொன்னதும் வந்து விட்டான். என் மனைவி பள்ளிக்கூடம் ஒன்றில் ஆசிரியையாக இருந்து வந்தாள். இன்னும் சுறுசுறுப்பாகச் செயல்பட விரும்பினாள்.

''மகனின் விருப்பத்தை நிறைவேற்ற சூப்பர் மார்க்கெட் 'லட்சுமிலாண்ட்' தொடங்கினோம். என்னுடைய குறிக்கோள் 15000 ஐட்டங்களை விற்பனை செய்வது. இப்போது 9320 ஐட்டங்களை எட்டி விட்டோம்!'' என்றார் ராவ்.

உள்ளே அழகான அமைப்பு என்றால், வெளித் தோற்றமும் வெகு கவர்ச்சியானது. ஏறும் படிகள் கூடப் பச்சைக் கம்பளம் பதிக்கப்பட்டது!

அன்றாட நிர்வாகத்தில், அம்மாவும் பையனும் எடுக்கும் முடிவுகளில், ராவ் குறுக்கிடுவதில்லை. ''ஏதாவது ஆலோ

வரும் ஆடிப்பெருக்கு (2.8.93) அன்று எங்கள்
CUMULATIVE DEPOSITல் முதலீடு செய்து
3 ஆண்டுகளில் இருமடங்காக பெறுங்கள்




- LEVER FILE
- TAG FILE
- CLIP FILE
- FIBRE BOARD FILE
- WRITING PAD

தங்கள் முன்னேற்றத்தில் உற்ற தோழன்... 1947 முதல்

**FIXED DEPOSITS ALSO ACCEPTED AT**

# 24% P.A.

| | | |
|---|---|---|
| குறைந்தபட்ச டெப்பாசிட் | : | ரூ.3000/- |
| குறைந்தபட்ச காலம் | : | 12 மாதங்கள் |
| வட்டி அனுப்புதல் | : | மாதம்தோறும் |

**MUTHUVEL INDUSTRIES,** MFRS. OF COCK BRAND OFFICE FILES,
Angappa Chettiar Industrial Complex, 20-A, Round Road,
Post Box No.32, DINDIGUL - 624 001. TAMIL NADU.
© Office: 5260 & 7637, Residence: 5643 & 3726 Grams: COCKFILE

சனை தேவைப்பட்டால் என்னிடம் கேட்பார்கள்!'' என்கிறார் ராவ்.

புரொவிஷன்ஸ் தவிர, ரெடிமேடு ஆடைகள், பரிசுப் பொருள்கள், விளையாட்டுச் சாதனங்கள், புத்தகங்கள் என்று நிறையவே இந்த இரண்டு - தளங்களில் இருக்கின்றன. இரண்டாம், மூன்றாம் மாடிகளை விரைவில் பயன்படுத்தவிருக்கிறார்கள்.

''இந்த இடத்தைச் சுற்றி 22 மளிகைக் கடைகள் இருக்கின்றன. பொது மக்களுக்கு எங்கே வேண்டுமானாலும் போய் வாங்கும் சுதந்தரம் இருக்கிறது!'' என்கிறார் ராவ். ''சென்னை வாடிக்கையாளர்கள் கொஞ்சம் கன்சர்வேடிவ்'' என்கிறார். பம்பாய், தில்லி, பெங்களூர் மாதிரி அல்லவாம். அங்கே எல்லாம் நேரம்தான் முக்கியம். ''இங்கே அக்கம் பக்கத்தில் விலை விசாரித்து, ஒப்பிட்டுப் பார்த்து, இங்கேயா - அங்கேயா என்று முடிவெடுக்க நேரம்



* பூர்ணசந்திரராவ்



* சந்திரசேகரன்

ஆகிறது. இத்தனைக்கும் விலை வித்தியாசம் பத்துப் பைசா முதல் ஐம்பது பைசா வரைதான் இருக்கும். பிறகு இங்கேயே வந்து வாங்குவார்கள்!'' என்று சொல்லுகிறார் ராவ்.

ஆனாலும் அயல்நாட்டு கான்சலர் அதிகாரிகள், அரசாங்க அதிகாரிகள் எல்லாரும் நிம்மதியாக ஷாப்பிங் செய்ய இங்குதான் வருகிறார்கள். காய்கறிக் கடை, டெலிபோன் பூத், ஸ்நாக்பார் என்று சுற்றிலும் இருக்கிறது. ''முக்கியமான லாண்ட்மார்க் ஆகி விட்டது லட்சுமிலாண்ட்'' என்கிறார் ராவ்.

மூன்றாம் ஆண்டு விழாவை இந்த ஆகஸ்ட்டில் தொடங்கியிருக்கிறார்கள். ''இந்த மூன்று ஆண்டுகளில் மக்களின் நம்பிக்கையைச் சம்பாதிக்க முடிந்ததுதான் பெரிய சந்தோஷம்!'' என்கிறார் பூர்ணசந்திர ராவ்.

## இந்தியாவில் முன்னோடி :

தென் சென்னையில் மட்டும் சுமார் பத்து சூப்பர் மார்க்கெட்டுகள் நடத்தும் ஒரே நிறுவனம் டி.யு.சி.எஸ். தேனாம்பேட்டையில் 'வானவில்'லை ஒட்டி அமைந்துள்ள 'காமதேனு' சூப்பர் மார்க்கெட்டில், உள்ளேதான் விசாலமான அமைப்பு என்றில்லை. ''இத்தனை தாராளமான கார் பார்க்கிங் வேறு எங்குமே கிடையாது!'' என்கிறார் ஜெனரல் மானேஜர் சந்திரசேகரன், பெருமையுடன்.

''ஆரம்பம் 1966ல். 85ல் இந்தச் சொந்தக் கட்டடம் வாங்கினோம்'' என்கிறார் சந்திரசேகரன்.

ஒட்டுமொத்தமாக விளைச்சல் இடத்திலிருந்தே எல்லாச் சாமான்களையும் வாங்கிவிடுவதால் விலை மலிவாகக் கொடுக்க முடிகிறதாம். நாக்பூரிலிருந்து துவரம் பருப்பு; தும்கூரிலிருந்து புளி; ராமநாதபுரத்திலிருந்து மிளகாய்; சர்க்கரை ஆலைகளின் கூட்டமைப்பிலிருந்து சர்க்கரை...

''உங்கள் ஸ்பெஷாலிடி என்ன?''

''எங்கள் சொந்த செக்குகளிலேயே எண்ணெய் தயாரிக்கிறோம். டி.யு.சி.எஸ். எண்ணெயின் தரம் புகழ்பெற்றது.''

ஐநூறு ரூபாய்க்கு மேல் வாங்கும் வாடிக்கையாளருக்கு ஒரு சதவிகிதக் கழிவு உண்டு. இலவச வீட்டு டெலிவரியும் உண்டு. (இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்குள்!)

அங்கத்தினர் என்றால் டிமாண்ட் ஊட்டங்கள் கொடுப்பதில் முதல் சலுகை உண்டாம்! ஹாஸ்டல்கள், கல்யாண பார்ட்டிகள், மருத்துவமனைகள், மருத்துவக் கல்லூரிகள் எல்லாமே தொடர்ந்து 'காமதேனு'வில்தான் மளிகைச் சாமான்களை மொத்தமாக வாங்குகிறார்கள். பிரைமரி கோவாபரேடிவ் சொஸைடிகள் இவர்களிடம் வாங்கும் பொழுது 5 சதவிகிதத் தள்ளுபடி கொடுத்து விடுகிறார்கள். (எண்ணெய் மட்டும் இரண்டு சதம் தள்ளுபடி.)

துணிமணிகள், கறிகாய்கள், பரிசுப் பொருள்கள், தோல் பொருட்கள், டீவி, ஃப்ரிஜ், சைக்கிள் என்று இங்கே இல்லாததே இல்லை!

ஒரு மாதத்தின் கடைசி வாரத்திலிருந்து மறு மாதத்தின் பத்துத் தேதிகள் வரை கடையில் கூட்டம் அதிகமாக இருக்கும். மாதத்தின் முதல் ஞாயிறு திறந்தே இருக்கும் சூப்பர் மார்க்கெட். ''இங்கு வந்து விட்டு இல்லை என்று திரும்பிப் போகிற மாதிரி இருக்கவே இருக்காது!'' என்கிறார் சந்திரசேகரன். கூட்டுறவுத் துறையில் இங்கே இயங்கும் ஒரே சூப்பர் மார்க்கெட் 'காமதேனு'.

பேட்டி, கட்டுரை : **சாருகேசி**

சூப்பர் சிறப்பிதழ் தொடர்பான வண்ணப்படங்கள், புகைப்படங்கள் :

**கோபிநாத்**

அஞ்ஞான இருளைப் போக்கி மெஞ்ஞான வாழ்விற்கு வழிகாட்ட
தெய்வீகம் உங்கள் வீடு தேடி வருகிறது.

# காஞ்சிப் பெரியவர் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அருளுரையுடன்




## காஞ்சி மாமுனிவரின் வாழ்க்கை சித்திரத்தை

பக்தி பரவசம் நிறைந்த தமிழ் பாடல்களாக

## குயில் கேஸட்

தயாரிப்பாளர்கள்

## ஜெய ஜெய சங்கர சிவ சிவ சங்கர

ஆடியோ கேஸட்டுகளை உங்களுக்கு வழங்குகிறார்கள் 8 ட்ராக் ஸ்டீரியோ போனிக் முறையில் ரிக்கார்ட் செய்யப்பட்டுள்ளது.

கீழ்க்கண்ட கூப்பனை பூர்த்தி செய்து அனுப்பும் பொழுது உங்களுக்குப் பிடித்த முதல் மூன்று பாடல்களை வரிசைப்படுத்தி அத்துடன் 10 வார்த்தைகளுக்குள் இந்த கேஸட்டை நீங்கள் எப்படி ரசித்துக் கேட்டீர்கள் என்று எங்களுக்கு எழுதியனுப்பவும். சிறந்தவற்றிற்கு பரிசுகள் உண்டு.

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ.500/- |
| இரண்டாம் பரிசு | ரூ.250/- |
| மூன்றாம் பரிசு | 3 கேஸட்டுகள் அடங்கிய பாக்கெட் |

சென்னை நகரிலுள்ளவர்களுக்கு இலவச டெலிவரி. வெளியூரிலிருப்பவர்கள் ரூ.6/- சேர்த்து M.O. செய்யவும்.



விலை
ரூ. 27/-



குயில் கேஸட்
85, ஜி.என். செட்டி சாலை
தி.நகர், சென்னை - 600 017.
போன்: 8280600

குயில் ஆடியோ கேஸட்டுகள் எல்லா முன்னணி கடைகளிலும் கிடைக்கும்.

பெயர் ....................................

முகவரி ....................................

நான் இந்த கேஸட்டை விரும்புகிறேன்.
ஏனெனில் ....................................

....................................

JEGI/KC/0293

# பாண்டியன் மகள்

## இதுவரை நடந்தவை...

அரியணையேறியதும் முதற்குலோத்துங்கன் சாளுக்கியப் போரைத் தொடர வடக்கே சென்று விட்டதாலும், சொற்ப காவற்படைகளே சோழ நாட்டில் காவலுக்கிருப்பதாலும் துணிவு பெற்ற பாண்டிய மார்த்தாண்டன், மாறவர்மனை மதுரை அரியணையிலமர்த்தும் முயற்சியில் மேலைமங்கலத்தைத் தாக்கிக் கைப்பற்றுகிறான். சோழ இளவரசி அம்மங்கையைக் கடத்தும் முயற்சியிலிருந்து அவளை மீட்கும் அரையன் மதுராந்தகன், மேலைமங்கலத்தையும் மீட்டு சோழ இளவல் விக்கிரமனின் அன்புக்கும், இளவரசியின் காதலுக்கும் பாத்திரமாகிறான். பின் பொதிகைக் கூற்றத்திலிருந்து, மதுரை அரியாசனத்துக்கு உரிமையுடைய பூர்வ பாண்டியன் மகள் கார்குழலியை மீட்டு, சேரநாட்டுக்கடற்படைத்தளத்தையும்கண்டறிகிறான். சேரன் தலைநகருக்கு வந்து ஈழத்துத் தண்டநாயகனும் சேரமானும் பாண்டியருக்குச் செய்ய முற்படும் படை உதவியில் தடைக்கலேற்பட வைக்கிறான். கார்குழலியைக் கொல்ல மதுரைக்கு வரும் ஈழத்து மார்க்கியோனையும் சிக்க வைக்கிறான்.

மதுரைக்கு மீண்டு வரும் அரையன், சாளுக்கிய எல்லைக்கு ஜெயந்தனுடன் வந்து, சோழ இளவல் ராஜராஜனை ஜெயதுங்கனிடமிருந்து வாட்போரிட்டு மீட்டு, தனிமைக் கோட்டையையும் அதிலிருந்த ஆயிரம் போர்க் களிறுகளையும் சோழர் படைகளிடம் சிக்கச் செய்கிறான். மன்னனின் சபையிலும் ஓரிடம் பெறும் அரையன், பாண்டிய சேரர் மீது படையெடுப்புத் திட்டமொன்றை வகுத்து, மன்னனின் ஒப்புதலையும் பெறுகிறான்.

காஞ்சியில் சிறையிலிருந்து விசாரணைக்கு வரும் வழியில் மார்க்கியோன் தப்பி உறையூர் வந்து, கார்குழலியைக் கடத்திச் சென்று விடுகிறான். மார்க்கியோன் தப்பிச் செல்லும் மார்க்கத்தை ஒருவாறு ஊகிக்கும் விக்கிரமன் கார்குழலியை மீட்கவும் மார்க்கியோனைச் சிறைசெய்யவும் திட்டம் வகுத்து, ஓலையுடன் ஒரு வீரனை எங்கோ அனுப்புகிறான்.

மார்க்கியோனுக்கு உதவ வந்திருக்கும் காளிங்கனிடமிருந்தும் பொதக்குட்டனிடமிருந்தும் தப்பிய கார்குழலி, நாகையின் சூடாமணி விஹாரத்துத் தலைவரால் காக்கப்படுகிறாள். கடாரத்து அரச வம்சத்தவரான அந்த புத்த துறவியால் மீண்டும் மார்க்கியோனிடமிருந்து காக்கப்படும் கார்குழலி, தஞ்சையில் விக்கிரமனை அடைகிறாள்.

தப்பிய மார்க்கியோன், காட்டில் ஒளிந்து திரிந்து, பின் படகில் ஈழத்துக் கலத்தை அடையமுற்படுகிறான். ஏற்கெனவே சோழ இளவல் கொடுத்த தகவல்களின்படி, ஈழத்துக் கொடிகளுடன் வரும் சோழர் கடற்படைத் தலைவன் கருணாகர பல்லவனிடம் சென்று சிக்குகிறான் மார்க்கியோன்.

மாறவர்மனிடம் நம்பிக்கையிழக்கும் ஈழத்து இளவரசன் பராக்கிரமபாகு, கொங்குப் பாண்டிய இளவல் குலசேகரனைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவனை முதலாக வைத்து, தமிழகத்தில் கால்பதிக்கும் எண்ணத்துடன் வருகிறான். அவன் யாரென்பதை அறியாத குலசேகரன், பராக்கிரமபாகுவிற்கு அம்பு முனையில் வரவேற்பளிக்கிறான்.

## 29. மன்னன் மறுப்பும் மங்கையின் சிரிப்பும்

மனிதனாகப் பிறப்பவனுக்கு இயற்கையாலும் பகைவராலும் ஏற்படும் அபாயங்கள் அதிகம். அதிலும் அரச குலத்தில் பிறந்தவனுக்கு மற்ற நாட்டவராலும், உடனிருந்தே கொல்லும் துரோகிகளாலும், ஒற்றர்களாலும் உண்டாகும் அபாயங்கள் அதிகம். சொந்த நாட்டிலேயே எப்போதும் அபாயங்களை எதிர்பார்ப்பவனும், வேற்று நாட்டுக்குச் செல்லும் போது அதை இரு மடங்கு எதிர்பார்ப்பவனுமான ஈழத்து இளவரசன் பராக்கிரமபாகு, கரையில் ஒருவன் புரவி மீது அமர்ந்தபடி கையில் வில்லும் அம்புமாகத் தன்னைக் குறிவைப்பதைக் கண்ட பின்னும் அதைப் பற்றி எந்த விசாரமுமின்றி ஏதோ வேடிக்கை பார்க்க வந்தவனைப் போல அலைகளையும் கரையில் விரிந்த பசுமையையும் பார்த்துக் கொண்டு வந்தானென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது.

மாறவர்மனை நேரில் சந்திக்கும் வரை அவனைக் காரணமாக வைத்துத் தமிழகத்தில் காலடி பதிக்கலாம் என்று நம்பியிருந்தவனுக்கு, மாறவர்மனது அவசர குணமும், நிதானமற்ற போக்கும் அஞ்சனாவை அவன் வெறித்து நோக்கிய விதமும் அப்போது அவன் பேச்சு குளறியதும் பெரும் ஏமாற்றத்தையே அளித்தன. போதாக்குறைக்கு அஞ்சனாதேவி மாறவர்மன் மீது காட்டிய வெறுப்பும் அவனது நம்பிக்கையை அர்த்தமற்றதாக்கி விட்டது.

மாறவர்மனும் மார்த்தாண்டனும் கொங்குப் பாண்டியனைத் தம்முடன் போரில் பங்கேற்கச் செய்யப் பெரிதும் முயற்சி செய்கிறார்கள் என்பதை அறிந்ததிலிருந்து, 'ஏன்? அந்த அளவிற்குக் கொங்கு மன்னன் ஜெகவீர பாண்டியன் பலமுடையவனாக இருப்பதால்தானே?' என்ற எண்ணமும் இவனுள் எழுந்தது. மேலும் அமைச்சர் கூறிய விவரங்களின்படி கொங்கு மன்னனின் வம்சம் பாண்டியர் வம்சத்திலேயே பழைமையும் பெருமையும் வாய்ந்தது என்பதையும் அதன் நட்பும் பிணைப்பும் சோழர்களைக் கூட கட்டுப்படுத்தக் கூடும் என்பதையும் அதன் இளவல் குலசேகரன் பல வகையிலும் மாறவர்மனை விட அரசாளத் தகுந்தவன் என்பதையும் அறிந்து கொண்ட பராக்கிரமபாகு, தமிழகத்தில் ஈழத்து அரசையும் ஆதிக்கத்தையும் அமைக்க மாறவர்மனை விடக் குலசேகரனே தகுந்தவன் என்று தீர்மானித்துக்

**விஷ்வக்சேனன்**



"உங்க படத்துல தண்ணி லாரில ஏன் சண்டைக் காட்சி எடுத்தீங்க?"

"ஹீரோ வில்லனுக்குத் தண்ணி காட்டறதை சிம்பாலிக்கா காட்டியிருக்கோம்!"

– ராதா வாசுதேவன்

கொண்டான். அவன் வீரத்திலும் வில்லிலும் பாண்டிய நாட்டில் இணையற்றவன் எனில் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டால் என்ன? மாறவர்மனை அகற்றித் தானே அரியணையேறக் குலசேகரனை ஆவல் கொள்ள வைத்தால் என்ன? இவ்வாறு தீர்மானித்து, தன் கலத்தில் பாண்டிய நாட்டின் கரையை நாடி வந்து கொண்டிருந்தான்.

ஆனால் தனக்கு இத்தகைய வீர வரவேற்பு கிட்டும் என்பதை அவன் எதிர்பார்க்கவில்லை. கரையில் நிற்பவன்தான் தான் தேடி வந்த குலசேகர பாண்டியன் என்பதையும் அறியாதவனாகவே இருந்தான். தன்னை நோக்கிப் பாய்ந்து வந்த அம்பைப் புன்முறுவலுடன் எதிர்கொள்ளவும் செய்தான்!

அம்பு பாய்ந்ததும் படகில் நிற்பவன் அப்படியே விழுவான் என்று எதிர்பார்த்த குலசேகரன் திகைத்து நின்றான். என்றும் குறி தவறாத அவன் அம்பு அன்றும் குறி தவறாது பராக்கிரமபாகுவின் மார்பில் பாயத்தான் செய்தது. மார்பில் பாய்ந்த அம்பு அப்படியே குத்தி நின்றது. படகில் நின்றவன் விழவுமில்லை; மார்பிலிருந்து ரத்தம் வரவுமில்லை. சிரித்தபடியே அம்பைப் பிடுங்கியவன், அதே கரத்தால் குலசேகரனைச் சுட்டிக்காட்டித் தன் வீரர்களுக்கு ஏதோ உத்தரவிட்டான்.

படகு குலசேகரனை நோக்கித் திரும்பியது. குலசேகரன் வியப்பில் விரிந்த விழிகளுடன் புரவியிலிருந்து இறங்கி நின்றான்.

மணலில் செருகி நின்ற படகிலிருந்து இறங்கிய பராக்கிரமபாகுவின் தோற்றமும், ராஜ உடையும், இடையில் நீண்டிருந்த வாளும் குலசேகரனுக்கு அவன் ஈழத்து அரச குலத்தவன் என்பதைப் புரியவைத்தன. தான் எய்த அம்பைக் கரத்தில் ஏந்தித் தன்னை நோக்கி வந்தவனின் புன்னகை அவனைச் சற்றுக் குழப்பவே செய்தது.

"வீரனே, பாண்டிய வீரர்களுக்கு விற்பயிற்சியில் இத்தனை திறமை உள்ளதென்று இப்போதுதான் அறிந்தேன். உன் அம்பைப் பெற்றுக் கொள்" என்ற பராக்கிரமபாகு தன் கரத்தை நீட்டினான்.

குலசேகரனுக்கு அவன் போக்கு புதிராக இருந்தது. அம்பு பாய்ந்தும் மடியாததோடு தன் மீது அம்பு எய்தவனைப் பாராட்டும் அந்த மனிதனையும் தன் அம்பின் முனையையும் மாறி மாறிப் பார்த்தான் குலசேகரன்.

"அம்பின் முனையில் பழுதொன்றுமில்லை" என்றவன் தன் மேலங்கியை சற்றே விலக்கிக் காட்டினான். அங்கியின் உள்ளே மெல்லிய ஆனால் உறுதியான இரும்பு வலையொன்றிருப்பதைக் கண்ட குலசேகரனுக்குத் தன் அம்பால் அவன் சாயாததன் மர்மம் விளங்கிற்று.

"நீங்கள் யாரென்பதை நான் அறியலாமா?" குலசேகரனின் கேள்வியில் வியப்பு ஒலித்தது.

"நான் ஈழத்து மன்னரின் முதல் மகன். பராக்கிரமபாகு என் பெயர்." சர்வ சாதாரணமாக அறிவித்த பராக்கிரபாகுவின் கூரிய விழிகள், குலசேகரனை இரண்டொரு விநாடிகளில் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்து விட்டன.

"உங்கள் தந்தையைக் காணவே நான் வந்தேன். பாண்டிய இளவலின் வீர வரவேற்பு கிடைத்தது என் பாக்கியம்" என்றான் பராக்கிரமபாகு.

குலசேகரனின் விழிகளில் வியப்பு அதிகரித்தது.

"நான்தான் இளவரசன் என்பது எப்படித் தெரிந்தது?"

"உங்கள் முகத்தில் ராஜ வம்சத்தவர் என்பது எழுதி ஒட்டியிருக்கிறது. நெற்றியின் குறுக்கே ஓடும் சிந்தனை நரம்பு, நீங்கள் ஒரு அரசை அமைக்கத் தகுந்தவர் என்பதைத் தெளிவாக்குகிறது. கழுத்தில் தொங்கும் பதக்கம் பழமையான பாண்டிய வம்சத்தின் சின்னம். தவிரவும் இளவரசர் குலசேகர பாண்டியருக்கு விற்பயிற்சியில் அசாத்தியத் திறமை உண்டென்பது நான் கேள்விப்பட்டதுதான்" என்றான் பராக்கிரமபாகு.

பராக்கிரமபாகு சாமர்த்தியமாக விரித்த வலையில் பூரணமாக விழுந்தான் குலசேகரன்.

பராக்கிரமபாகுவின் கூரிய பார்வையையும் மதியூகத்தையும் வியந்த குலசேகரன், "வாருங்கள் அரண்மனைக்குச் செல்லலாம்" என்றான்.

கடற்கரையை அடுத்த கிராமமொன்றிலிருந்து புரவிகளைப் பெற்றுத் தந்த குலசேகரன், பராக்கிரமபாகுவுடன் அரண்மனையை நோக்கி விரைந்தான்.

பராக்கிரமபாகுவின் வருகை அறிவிக்கப்பட்டதும் அவனை பலமாக உபசரித்து, நீராடவும், உணவருந்தவும் ஏற்பாடுகள் செய்த ஜெகவீர பாண்டியன், இரண்டு நாழிகைகள் சென்ற பின்னரே அவனை முத்தாணி மண்டபத்தில் சந்திக்க விரும்புவதாகச் செய்தி அனுப்பினான். இடையில் அமைச்சரை வரவழைத்து, அவருடன் தீவிரமான விவாதத்தில் இருந்தான்.

மெய்க்காவலர் பின்தொடர முத்தாணி மண்டபத்தில் நுழைந்த பராக்கிரமபாகு

பிரமித்து நின்றான். வெண்கலத்தாலான இரு பாவை விளக்குகள் மன்னன் அறையின் வாயிலில் நின்று வரவேற்றன. மேல் கூரையிலிருந்து தொங்கிய சரவிளக்குகள் மிக அழகாக இருந்தன. அந் நீபங்கள் அறையில் பாய்ச்சிய ஒளி வெள்ளத்தில் சுவரில் இருந்த சித்திரங்களும், தூண்களில் செதுக்கப்பட்டிருந்த சிற்பங்களும் பொலிந்தன. அவற்றின் அழகிற்குத் தன் அரண்மனையின் சிற்பங்களும் சித்திரங்களும் உறைபோடக் காணாது என்பதை உணர்ந்தான்.

ஆசனத்திலமர்ந்து மன்னனை ஏறிட்ட பராக்கிரமபாகு, ''பாண்டி நாட்டின் சித்திரங்களும் சிற்பங்களும் பிரமிக்க வைக்கின்றன'' என்றான்.

''பாராட்டுதலுக்கு நன்றி. ஈழத்து இளவரசரின் வருகை மாறவர்மருக்கு அறிவிக்கப்படவில்லையென்று நினைக்கிறேன்.''

பாதி கேள்வியாக ஒலித்த மன்னன் சொற்களில் சந்தேகம் நிரம்பிக் கிடந்ததை கவனித்த பராக்கிரமபாகு, பாண்டிய மன்னனுக்குச் சிறிதளவு சந்தேகம் எழுந்தாலும் அது தான் மேற்கொண்டுள்ள ஏற்பாடுகளைச் சிதைத்து விடும் என்பதைப் புரிந்து கொண்டதால், சற்று எச்சரிக்கையாகவே பேசவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

''எங்களது ஒற்றன் ஒருவன் காஞ்சியிலிருந்து தப்பி நாகைக்கு வந்திருப்பதாக அறிந்தேன். நாகை செல்லும் வழியில் உங்களைக் காணலாம் என்று வந்தேன்'' என்றான் பராக்கிரமபாகு.

அவன் முகத்தில் முதலில் விரிந்த சிந்தனையும் பிறகு அவன் கூறிய பதிலும் பொருந்துவதாக இருந்தாலும் அவன் கூற்றில் அத்தனை உண்மை இல்லை என்பதைக் கணப் பொழுதில் கண்டுகொண்ட மன்னன், இவன் அவ்வளவு நம்பத் தகுந்தவன் அல்ல என்று தீர்மானித்துக் கொண்டான்.

ஒருவரை ஒருவர் நம்பவில்லை என்பதை இருவருக்கும் பொதுவாக நிலவிய சற்று நேர மௌனம் உணர்த்தியது.

''போருக்கான ஏற்பாடுகள் எவ்வளவு தூரத்தில் உள்ளன மன்னவா?'' பராக்கிரமபாகு மெதுவாகத் தொடங்கினான்.

''எமது படை எந்த வினாடியிலும் கிளம்பத் தயாராக இருக்கிறது. மாறவர்மரின் கோரிக்கை கிடைத்ததும் இரண்டாவது நாழிகையில் நமது படை அணிவகுத்து விடும்.''

''மாறவர்மர் மதுரை அரண்மனையில் அமர்வதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?'' பராக்கிரமபாகுவின் இந்தக் கேள்வி மன்னனின் புருவங்களை உயர வைத்தது.

''எதற்காகக் கேட்கிறீர்கள்?''

''ஜடாவர்ம பாண்டியரின் மகள் ஒருத்தி இருப்பதாக நீங்கள் கேள்விப்படவில்லையா?''

மன்னனது பதில் திட்டவட்டமாக வந்தது.

''நான் அந்தக் கட்டுக் கதைகளை நம்புவதாக இல்லை. மாறவர்மரிடமிருந்து செய்தி வந்ததும் அவருடன் சேர்ந்து போர் புரிய ஒப்புக் கொண்டிருக்கிறேன். கொடுத்த வாக்கிலிருந்தும் எடுத்த முடிவிலிருந்தும் என்றும் நான் பின்வாங்கியதில்லை.''

**ப**ராக்கிரமபாகு சிந்தித்தான். சற்றுப் பொறுத்துக் கூறினான் :

''மன்னவா, உங்களது இந்த அரசு பாண்டிய வம்சத்தில் மிகப் பழைமையானது.''

''ஆம்.''

''நெடுங்காலமாகச் சோழருடன் பிணைப்பும் நட்பும் உடையது.''

''உண்மைதான்.''

''தற்போது நேரிடையாகச் சோழருடன் உங்களுக்குப் பகை இல்லை.''

''ஆம்.''

''இப்போதுள்ள நிலையில் உங்கள் மகனை ஏன் மதுரை அரியணையில் அமர்த்தக் கூடாது?''

மௌனமாக அதுவரை அமர்ந்திருந்த அமைச்சர் தன் மனத்தில் உள்ள அதே கேள்வியைப் பராக்கிரமபாகு கேட்பதைக் கண்டு திகைத்தார். அப்போதுதான் அறைக்குள் நுழைந்த குலசேகரனின் விழிகள் வியப்பில் விரிந்தன.

இந்தக் கேள்வி மன்னனையும் பாதித்திருக்க வேண்டும். ஆனால் சற்று சிந்தித்த மன்னன் கூறினான் : ''அது இயலாது பராக்கிரமரே, நான் ஏற்கெனவே மாறவர்மருக்கு வாக்குக் கொடுத்து விட்டேன்.''

''நன்றாகச் சிந்தியுங்கள் மன்னவா. மதுரையைக் கைப்பற்றிய சோழன், உங்களையும் இந்த அரசையும் மட்டும் எவ்விதத்திலும் பாதிக்காதவாறு விட்டு வைத்திருக்கிறான் என்றால் அதற்குப் பழைய பிணைப்பும் நட்புமே காரணம். குலசேகர பாண்டியர் அரியணை ஏற்பதில் சோழருக்கு அதிக மறுப்பேதுமிருக்காது. ஆனால் இப்போது



''என்னய்யா இது! ஆபீஸ் டயத்துல டேபிள் மேல காலைத் தூக்கி வச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கே?''

''என்ன சார் பண்றது.... தூக்கமே வரலையே...!''

- சீர்காழி வி. ரேவதி

உத்தேசிக்கப்பட்டுள்ள போரினால் நீங்கள் நேரிடையாகச் சோழரிடம் பகை கொள்கிறீர்கள்.''

மன்னன் நீண்ட மௌனத்தில் ஆழ்ந்தான்.

பராக்கிரமபாகு தொடர்ந்தான் : ''மாறவர்மரைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். உங்கள் படையும் ஈழத்துப் படையும் போரிலிருந்து விலகினால் அவரது பாதி பலம் குறைந்து விடும். சேரலாதரும் இப்போதுள்ள தயக்கம் அதிகரிக்க முழுதுமாக விலகி விடுவார். மாறவர்மரின் எதிர்ப்பை நான் பார்த்துக் கொள்கிறேன். எங்கள் உதவிக்கு அத்தாட்சியாக...'' என்று இழுத்தான் பராக்கிரமபாகு.

நிமிர்ந்து அவனை நோக்கிய மன்னன் முகத்தில் சந்தேகம் விரிந்தது.

''அத்தாட்சியாக...?''

''எங்கள் இளவரசி அஞ்சனாதேவியைக் குலசேகரருக்கு மணம் முடித்துத் தருகிறோம்'' என்றான் பராக்கிரமபாகு.

**ப**ராக்கிரமபாகுவின் யோசனை மட்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தால் கோட்டாற்றுப் போர் என்று ஒன்று சரித்திரத்தில் ஏற்பட்டிருக்காது. பாண்டிய நாடும் பின்னாவில் ஏற்பட்ட வாரிசுரிமைச் சச்சரவால் சீரழிந்திருக்காது. மக்களின் நிம்மதியும் அமைதியும் இன்னும் சில காலம் தொடர்ந்திருக்கும்.

ஆனால் மாறவர்மனுக்கு உதவுவதற்கு வாக்களித்து விட்ட மன்னன், அதிலிருந்து பிறழ்வது பெரும் துரோகம் என்று எண்ணியதாலும் ஏற்கெனவே மாறவர்மனுக்குப் பேசப்பட்ட பெண்ணைக் குலசேகரனுக்கு மணமுடிப்பது பெரும் அநீதியென்று எண்ணியதாலும் இந்த யோசனையை ஏற்க மறுத்தான்.

''முடியவே முடியாது பராக்கிரமரே! மாறவர்மருக்கு எதிராக நடக்க என்னைத் தூண்டாதீர்கள்.''

''மன்னவா! உங்கள் மகனுக்குக் கிடைக்கப் போகும் அரியணையை நீங்கள் மறுக்கிறீர்கள். மக்களுக்குப் போரினால் ஏற்படப் போகும் கஷ்டங்களைத் தடுக்கும் வழியை மறுக்கிறீர்கள். குலோத்துங்கனது யுத்த தந்திரமும், படையும் சாமான்யமானதல்ல. இப்போதுள்ள சிற்றரசையும் நீங்கள் இழக்க நேரிடலாம்.'' பராக்கிரமபாகுவின் எச்சரிக்கையும், வேண்டுகோளும் பயனற்றுப் போயின.

''குலசேகரனை மதுரை மன்னனாக்குவதில் ஈழத்திற்கு என்ன லாபம்?'' மன்னனது கேள்வி சற்று உஷ்ணமாகவே வந்தது.

''காரணம் மிகத் தெளிவு மன்னா. பாண்டிய நாட்டுடன் எமது வாணிபம் நேரிடையாக நடக்கும். சோழருடன் நேரடிப் பகை தீர்ந்து நாங்கள் சுதந்திரமாகத் தமிழகத்தில் உலவ முடியும். அதுவுமின்றி...'' என்று இழுத்த பராக்கிரமபாகுவின் முகத்தில் விஷமம் படர்ந்தது.

மன்னனின் புருவங்கள் 'என்ன?' என்பது போல ஒன்று கூடின.

''ஈழத்து இளவரசிக்கு மாறவர்மரை மணப்பதில் அந்தளை விருப்பமில்லை'' என்றான் பராக்கிரமபாகு.

பராக்கிரமபாகுவின் தந்திரம் புரிந்ததால் மன்னன் மனத்தில் சினம் தலையெடுக்க ஆரம்பித்தது. மன்னனைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த பராக்கிரமபாகு, அவன் மனத்தில் ஓடிய எண்ணத்தைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

''மன்னவா, நீங்கள் மறுப்பதானால் நானும் என் வேண்டுகோளை மறந்து விடுகிறேன். மாறவர்மருக்கு எங்கள் உதவியில் எந்த மாற்றமுமில்லை. திருமணம் மட்டும் சற்று தாமதப்படலாம்'' என்று தனக் கேதும் வருத்தமில்லையென்பது போலப் பேசிய பராக்கிரமபாகு சற்றுக் கழித்து, ''மன்னவா, உங்கள் இளவரசர் ஈழத்துப் போர்க்கலத்தைக் காண விரும்புகிறார். தாங்கள் அனுமதித்தால்...'' என்று இழுத்தான்.

''தாராளமாக அழைத்துச் செல்லுங்கள்'' என்ற மன்னன் அரியணையில் நன்றாகச் சாய்ந்து சிந்தனையில் மூழ்கினான்.

குலசேகரனை அழைத்துக் கொண்டு வெளியே வந்த பராக்கிரமபாகுவை, ''நான் கலத்தைக் காண விரும்புவதாகக் கூறவில்லையே?'' என்று வினவினான் குலசேகரன்.

பதிலுக்குச் சிரித்த பராக்கிரமபாகு, ''உங்களிடம் தனித்துப் பேச விரும்பியதால் அப்படிக் கூறினேன்'' என்றான்.

பராக்கிரமபாகுவுடன் கலத்தை அடைந்த குலசேகரன், சர்ப்பமந்திர வகையைச் சேர்ந்த அந்தப் போர்க்கலத்தைப் பிரமிப்புடன் பார்த்தான். அவன் பிரமிப்பை உச்சிக்குக் கொண்டு செல்ல கலத்தில் தனி அறை ஒன்றில் எழிலெல்லாம் திரண்டு வடிவம் எடுத்தது போல் காத்திருந்தாள் ஈழத்து இளவரசி அஞ்சனா தேவி.

அறிமுகப்படுத்தியதும் அவள் கரிய விழிகள் அவனை நன்றாக ஏறெடுத்து நோக்கின. செவ்விய அவள் இதழ்களில் மயக்கம் தரும் முறுவல் ஒன்றும் மலர்ந்தது.

(தொடரும்)

# சூப்பர் ஸ்டாரை சூப்பர்மேனாக்கிப் படம் எடுத்தால்...



அநேக அநேக பிரச்னைகளால் திணறிக் கொண்டிருக்கும் சினிமாக்காரர்களை, நாமும் நம் பங்குக்குக் கொஞ்சம் சிண்டைப் பிய்த்துக் கொள்ள வைத்தால் என்ன என்று தோன்றியது. வசமாகச் சிக்கியவர்கள் இயக்குநர் எஸ்.பி. முத்துராமனும், ஆர்.வி. உதயகுமாரும். இரண்டு பேரிடமும் ஒரே கேள்வி. ''சூப்பர் ஸ்டார் ரஜினி காந்த் சூப்பர் மேனாக நடித்து, அதை நீங்கள் இயக்கப் போகிறீர்கள். அரை மணிக்குள் கதை தேவை. ரெடி, ஸ்டார்ட்!''

''திடீர்னு கதை சொல்லுன்னா நான் எங்கே போவேன்?'' என்று எஸ்.பி.எம். யோசிக்க ஆரம்பித்தார். கொஞ்ச நேர யோசிப்புக்குப்பின், ''கதைதான் வேணுமா, இன்ஸிடென்ட்ஸ் போதுமா?''

''அஞ்சு நிமிஷம் ஆயிடிச்சி.''

மறுபடியும் யோசிக்க, டெலிபோன். என்னவோ விழா. வர இயலாமைக்கு வருத்தம் தெரிவித்து, விழா சிறப்பாக நடக்க வாழ்த்துச் சொல்லி போனை வைத்த போது பத்து நிமிடம் காலி.

மனுஷர் அதற்கப்புறம் அப்படி இப்படி நகரவில்லை. அகர யோசிப்பு. மிகச் சரியாக காலை பத்து இருபதுக்கு யோசிக்க ஆரம்பித்து, பத்து ஐம்பத்தி நாலுக்கு 'ரெடி' என்று உற்சாகமாக நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''நாலு நிமிஷம் லேட்.''

சிரித்துக் கொண்டு ஆரம்பிக்கிறார்.

''மாநில ஆளுங்கட்சி மேல, எதிர்க்கட்சிகள் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வர முடிவு செய்யறாங்க. ஆளுங்கட்சி, சட்ட சபைல தன்னோட மெஜாரிட்டியை நிரூபிக்க வேண்டிய கட்டாயம். இன்னும் மூணு நாள்ல மறுபடி சட்டசபை கூடுது. அன்னிக்கு நைட்டு ஆளுங்கட்சி எம்.எல்.ஏக்கள் பாதிப் பேரைக் காணலை. ஸ்டேட் முழுக்கச் சல்லடை போட்டுத் தேடறாங்க. ஒரு பய அகப்படலை. கட்சித் தலைவருக்கு பயங்கர டென்ஷன். ஜனங்களுக்கு அதுக்கு மேல பரபரப்பு. ஓரளவுக்கு 'நல்ல பார்ட்டி'ன்னு சொல்லக் கூடிய கட்சி அது. என்ன பண்றதுன்னு யாருக்குமே புரியலை. சி.பி.ஐ. வராங்க, போலீஸ் வருது. ஆர்மி வருது. நோ யூஸ். பேப்பர் முழுக்க இதே நியூஸ். டி.வி. ரேடியோவெல்லாம் அலறுது. அப்பத்தான் நம்ம ஹீரோ ஒரு பெட்டிக்கடைல வாழைப்பழம் சாப்பிட்டுக் கிட்டு வால் போஸ்டர் பார்க்கறாரு. மெதுவா சிரிக்கறாரு. மனசுக்குள்ள ஒரு குரல் கேக்குது. 'இன்னும் மூணே நாள் தான், பலத்தை நிரூபிக்கறதுக்கு இருக்கு. பேர்பாதி எம்.எல்.ஏக்களைக் கடத்திட்டுப் போயிருக்காங்க. நீ இன்னுமா சும்மா இருக்கறது?' அப்படின்னு. உடனே நம்ம சூப்பர் ஸ்டார் வாழைப்பழத் தோலை ஸ்டைலா தூக்கிப் போடறார். அது நேரா குப்பைத் தொட்டில போய் விழுது - கட். -







''சாதா டிரெஸ்ல அட்வெஞ்ச்சர் பண்ண முடியுமா? சூப்பர் ஸ்டார், அவசர அவசரமாத் தன்னோட ரகசிய அறைக்குப் போய் சட்டையை அவிழ்க்கிறார். கேமரா ஒரு ரவுண்ட் வருது. சூப்பர்மேன் ரெடி! முதுகுல வால் மாதிரி துணி பறக்குது. கட் பண்ணா, சூப்பர் மேன் மோட்டார் பைக்ல பறக்கறார். ரோட்டோரம் நிக்கறவங்கள்லாம் அவரை பிரமிச்சிப் போய்ப் பாக்கறாங்க. திடீர்னு பைக்ல இருக்கற மைக் அலறுது. சூப்பர் மேன் ஓ.கே. ஓ.கேங்கறார். பைக் வேகமா ஓடுது. கட் சென்னை ஏர்போர்ட். ஒரு ஃப்ளைட் ரன்வேல மெதுவா வேகம் எடுத்துட்டிருக்கு. சூப்பர் மேன் பாய்ஞ்சு ஓடறார். பின்னாடி செக்யூரிட்டி ஆள், 'ஏய், ஏய்'னு ஓடிவரான்.

''**பி**ளேன் எழும்பிடிச்சி. இவர் ஓடிப் போய் ஜம்ப் பண்ணி உள்ள போக இருந்த சக்கரத்தைப் பிடிச்சிடறார். நைஸா உள்ள போய் சட்டுனு ஒரு கதவு பின்னாடி மறைஞ்சு, வெளில வரார். இப்ப ஆர்டினரி டிரெஸ். மெதுவாப் போய் காலியா இருக்கற ஒரு சீட்ல உட்கார்ந்துக்கறார். இந்த இடத்துல ஒரு தூங்கி விழற பக்கத்து சீட்காரர். ஒரு குண்டு ஏர் ஹோஸ்டஸ் வெச்சி காமெடி டிராக் சேர்த்துடலாம். வண்டி, பெங்களூர்ல இறங்குது. இவரு ஒரு ரகசிய ஆசாமியைச் சந்திக்கிறார் - சீன் முழுக்க ஸில் - அவுட்ல. அந்தாள் சொல்றான், 'மிஸ் பண்ணிட்டீங்க, இப்பத்தான் வாரில பாம்பே கிளம்பினாங்க.'

''கட் பண்ணா பாம்பே. அங்க ஒரு ஸ்டார் ஹோட்டல். காபரே. ஒரு பொண்ணு டான்ஸ் ஆடிட்டே வந்து ஒரு சீட்டைக் குடுக்குது. இவர் எழுந்துக்கறாரு. சட்டுனு லைட் அணைஞ்சுடுது. துப்பாக்கி சப்தம். (ஏன், எதுக்குன்னு கேக்காதீங்க). நம்ம சூப்பர் மேன் பாய்ந்து போய் அந்த டான்ஸர் பொண்ணைக் காப்பாத்தி வெளில அழைச்சிட்டு வர்றாரு. (வேற வழி இல்லாம) அவ மேல குண்டு பாஞ்சிருக்கு. சாகறத்துக்கு முன்னாடி லாஸ்ட்டா ஒரு ரகசியம் சொல்றா. ஒரு முத்தம் குடுன்னு கேட்டு வாங்கிக்கறா. பொட்டுன்னு ஹீரோ மடில மண்டையைப் போட்டுடறா.

''கட் பண்ண, இவரு ஒரு ஸ்டீம் போட்ல போயிட்டிருக்காரு. ஒரு தீவு. அங்கதான் எம்.எல்.ஏக்களைக் கடத்திட்டுப் போனதா அந்த டான்ஸர் சொல்லியிருக்கா. அங்க போனா, ஒரு ஆதி வாசி கும்பல். அவங்க திருவிழா, பாட்டு அப்படி இப்படின்னு கொஞ்ச நேரம். அந்த ஆதிவாசி கூட்டத் தலைவனோட பெண், நம்ம ஹீரோவை லவ் பண்றா.

ட்ரீம் ஸாங் இங்க ஒண்ணு வெச்சிடலாம். எம்.எல்.ஏக்களைக் காப்பாத்த வந்தவனுக்குக் கனவுகாண ஏது நேரம்னு கல்கில ரெவ்யூ எழுதுவீங்க. ஸோ ஹீரோ கனவு காணலை. அந்தப் பொண்ணுதான்!

''**எ**ங்கப்பாதான் அந்த எம்.எல்.ஏக்களைக் கடத்தினவங்களுக்கு ஆதரவு கொடுத்திருக்கார்'னு அந்தப் பொண்ணு சொல்லிடுது. அப்புறம் ஒரு ஃபைட், சேஸிங் எல்லாம் வழக்கம் போல வெச்சிக்கலாம். மறுபடியும் அவங்க அங்கேருந்து தப்பிச்சிடறாங்க. எவரெஸ்ட்ல இவங்களுக்கு ஒரு மர்ம குகை இருக்கு. அங்கதான் போவாங்கன்னு அந்தப் பொண்ணு சொல்லுது. உடனே நம்மாளு நீச்சல் அடிச்சே கடலைக் கடக்கறார். மாடி மாடியா டைவ் அடிச்சே மாநிலம் மாநிலமா கடக்கறார். அட்லாஸ்ட் எவரெஸ்ட் பனி. மலைவாசிகளோட ஒரு நைட் தங்கறார். அங்க ஒரு ஸாங் வெச்சிக்கலாம். விடிஞ்சா சட்டசபை கூடுது. மலைவாசிப் பெண் ஒருத்திக்கு இவர் மேல லவ்வு. ஸோ இன்னொரு ஸாங்!

''பாட்டு முடிஞ்சதும் இந்தப் பொண்ணு இடம் காட்ட, அங்க போய் ஃபைட். எதிரிகளை எவரெஸ்ட்லேர்ந்து விசிறி எறியறார். கிட்டத்தட்ட நாப்பது நாப்பத்தஞ்சு எம்.எல்.ஏ. அத்தனை பேரையும் தோள்ல தூக்கிக்கறாரு. (ஒண்ணு ரெண்டு பேரைப் பாக்கெட்ல போட்டுக்கறார்.)

''வரட்டுமா?'' அப்படீன்னு அந்தப் பொண்ணைப் பார்க்கறார். அது ஒரு மாதிரி சோகமாப் பாக்குது. இவர் என்ன பண்



ணுவார் பாவம்? ஏற்கெனவே அந்த தீவு பொண்ணு வேற அப்ளிகேஷன் போட்டிருக்கு. ஒரே வழி. ''வரேன் தங்கச்சி'' அப்படீன்னுட்டு சொய்ங்...னு பறந்தே ஊருக்கு வர்றாரு. மக்கள் சந்தோஷமா ஆடிப் பாடறாங்க. இவரும் சாதா டிரெஸ் மாட்டிக்கிட்டு ஒண்ணுமே தெரியாத மாதிரி டான்ஸ் ஆடறாரு. ஓ. கேயா?''

அதிகாலை குடும்ப சகிதமாய் எங்கோ கோவிலுக்குப் போய்விட்டு வீட்டுக்குள் நுழைந்த ஆர்.வி. உதயகுமார், விஷயத்தைச் சொன்னதும், ''சிவாஜி ஃபிலிம்ஸ்ல கூட இப்படி ஒரு கதை கேக்கலை சார்!'' என்றபடி யோசிக்க ஆரம்பித்தார். சரியாகப் பதினெட்டு நிமிஷம். ''ரைட், ஆரம்பிக்கலாமா?'' என்று ஆரம்பித்தார்.

''பதினெட்டு பட்டி கிராமத்துக்கு அவர் சூப்பர் பஞ்சாயத்து தலைவர். விசாரிக்கவே வேண்டாம்; அவரைப் பார்த்ததுமே உண்மை தன்னால வந்துடும். நிறைய சொத்து இருக்கு. இருந்தாலும் தாமே விவசாயம் பார்ப்பார். மழையே இல்லாட்டாலும் பயிர் விளைய வைப்பார். பூமிலேர்ந்து வேர் வழியா மரத்துக்குத் தண்ணி ஏறணும்னு இல்லை. அவர் கை பட்டுதுன்னா தண்ணி டைரக்டா மரத்துக்கே பாயும். நிலத்தை உழ அவருக்கு டிராக்டரே வேணாம். ஒரு நடை, வயல்ல இறங்கி நடந்தார்னா போதும். ஆனா அவர் தன்னோட திறமையைத் தனக்காகப் பயன்படுத்திக்கிறவர் இல்லை. பதினெட்டு பட்டி கிராமவாசிகளும் அவரோட நிழல்ல வாழறாங்க.

''பத்தொம்பதாவது பட்டி ஜமீந்தார் இதைப் பார்க்கறான். (அந்தாளைப் பார்த்தாலே வில்லன்னு தெரிஞ்சிடும்.) நம்ம சூப்பர் விவசாயி மேல அவனுக்குப் பொறாமை. 'நீ என்னடா பெரிசா விவசாயம் பண்ணிக் கிழிச்சே, நான் பார், 'ரோபோ'க்களை வெச்சி விவசாயம் பண்ணறேன்'னு, தன் பண்ணையில இருக்கற வேலையாட்களையெல்லாம் வீட்டுக்கு அனுப்பிட்டு, முழுக்க முழுக்க ரோபோக்களை வெச்சு விவசாயம் பண்ண ஆரம்பிக்கிறான்.

இதனால அந்த ஊர் ஏழை விவசாய மக்களுக்கெல்லாம் வேலை இல்லாம போயிடுது. அவங்க நேரா நம்ம சூப்பர் விவசாயி கிட்ட வந்து முறையிடறாங்க. 'இந்த மாதிரி அநியாயம் நடக்குது, நீங்க தலையிட்டுத் தீர்த்து வெக்கணும்' அப்படீன்னு.

''உடனே இவர் கிளம்பறார் - இந்த இடத்துல ஒரு பாட்டு வெச்சிக்கலாம், இந்த ஊரு பொண்ணுங்கள்லாம் வீரத்திலகம் இட்டு வழியனுப்பறா மாதிரி.

''ரோபோ கிராமத்துக்குப் போனா, அந்த ரோபோவெல்லாம் இவரை போட்டிக்குக் கூப்பிடுதுங்க. நம்ம சூப்பர் விவசாயி, ஒரே நாள்ல நாத்து நட்டு, உரம் போட்டு, வளர்த்து, களை எடுத்து நூறு ஏக்கரா நிலத்துல நெல் பயிரிட்டு அறுவடை பண்ணிக் காட்டறாரு. இதைப் பார்த்துட்டு லேடி ரோபோவெல்லாம் இவர் மேல ஒரு மாதிரி 'இது' வாயிடுதுங்க.

''டக்குனு அங்க ஒரு ஸாங் வெச்சிருவோம். சந்திர மண்டலம், அன்டார்ட்டிக் கண்டம் இந்த மாதிரி இடங்கள்ல அந்தப் பாட்டு. நம்ம சூப்பர் விவசாயி மேல இதனால அந்த ஜமீந்தாருக்குக் கடுப்பு ரொம்ப அதிகமாயிடுது. அப்புறம் என்ன? மனிதாபிமான சூப்பர் விவசாயிக்கும், கொடுமைக்கார ஜமீந்தாருக்கும் நடக்கிற தர்ம யுத்தம்தான் கிளைமாக்ஸ். கதை எப்படி?''

பேட்டி : பா. ராகவன்

மேலட்டை வண்ணச் சித்திரம் : ஸ்யாம்



# குறுகிய கால டெபாசிட்

## கணக்கை புதுப்பிக்க மறந்தீர்களா?

இப்போது கவலை வேண்டாம்:

அறிமுகம்

# கேவிபி ஸேஃப்

## KVB ஸேஃப் டெபாசிட் திட்டம்

(குறுகிய காலத்தில் அதிக பலன் தரும் திட்டம்)

ஒவ்வொரு முறையும் உங்களது குறுகிய கால டெபாசிட்டை அதன் காலக்கெடுவில் புதுப்பிக்க மறந்துபோகும் பிரச்னை ஏற்பட்டதுண்டா?
KVB இதற்கு சரியான யோசனையை வழங்குகிறது.

ஸேஃப் திட்டம் எளிதானது மட்டுமல்ல. உங்களுக்கு உயர்ந்தபட்ச பலனைத் தரும் வகையில் அமைந்துள்ளது. 6 முறை தானாகவே புதுப்பித்துக் கொள்ளும் திட்டம் இது. மேலும், டெபாசிட் தொகையில் 75% வரை கடன் பெற வசதியும் உண்டு.

இத்திட்டம் உங்களுக்கு முற்றிலும் ஏற்றது. உங்கள் நலனில் அக்கறை கொண்டுள்ள KVB யில் ஸேஃப் டெபாசிட் கணக்கைத் துவக்குங்கள். KVB யில் டெபாசிட் செய்வது எப்போதுமே பாதுகாப்பானது; அதிக பலன் தருவது.



**கரூர் வைஸ்யா பாங்க்**

கரூர் - 639 002

கனவுகளை நனவாக்கிய 77 ஆண்டுகள்...

**கறுப்புத் துவாரங்கள் (BLACK HOLES)**

மிக வயதான நட்சத்திரம் தன் காலம் முடிந்தவுடன் தன் நெருப்பு விரல்களை இழுத்து, சுருங்கிச் சுருங்கி, சுருங்கி - சூரியனைப் போல பல மடங்கு பெரிய நட்சத்திரம் ஓர் ஆரஞ்சுப்பழ சைஸுக்கு சுருங்கி விடும். அந்த ஈர்ப்பு விசை காரணமாக மைய புரோட்டான்களும், எலக்ட்ரான்களும் நெருக்கியடித்து, நியூட்ரான் நட்சத்திரமாகி, அதுவும் சுருங்கி, கண்ணுக்குத் தெரியாமல் கறுப்புத் துவாரம் ஆகிறது. பிளாக் ஹோல்ஸ் எனப்படும் இவை, விண்வெளியை வளைக்கும்; காலத்தைத் திரிக்கும் ஆற்றல் பெற்றவை. இயற்கை விதிகளுக்கு அப்பாற்பட்டவை. அருகில் வரும் மற்ற நட்சத்திரங்களையே விழுங்கி, இல்லாமல் ஆக்கி விடும் மரணவிசை கொண்டவை. ஒளி அலைகளையும் உறிஞ்சி, ஒருவழிப்பாதையாக விளங்கும் இதனுள் பொருட்கள், சக்தி, ஒளி எல்லாம் உள்ளே போகும். எதுவும் மீண்டு வெளியே வர முடியாது.

## எச்சரிக்கை!

*உலக வாழ்க்கை முடிய நான்கே வாரங்கள்!*

*குமாரி அனிதா!*

*ஊடல் போதும், அரவிந்தை அழைத்துக் கொள்!*

அலெக்ஸுக்குத் தண்டனை அன்றே வரும்.

# ஆத்மாவுக்கு

அத்யம் - ஏ



ஐந்து x ஐந்து நட்சத்திர ஹோட்டல் போன்ற வீடு.

பூமி சுழன்று சூரியப் பார்வையைத் தவிர்த்த அந்த மாலையில், அலெக்ஸ் விவி முன் அமர்ந்திருந்தான். அருகில் அழகுப் பெண்கள். உற்சாக பாவம் உரமேற்றியது. அப்போதுதான் அந்த எச்சரிக்கை விவியில் ஒளிர்ந்தது. ஒலித்தது.

''தடயமில்லாமல் காணாமல் போன உலகப் பிரஜைகளுக்கு அரசு பொறுப்பேற்கிறது. மறைவில் தொடர்பு கொண்ட மர்ம மனிதன் ஊர் விட்டு ஊர் ஓடிக் கொண்டிருக்கிறான். சுமார் ஆறடி உயர வித்யாஸ மனிதனைப் பற்றிய தகவல் தந்தால், ஒரு கோடி ரூ பரிசு. உளவுத் துறைக்கு ஒத்துழைப்புத் தாருங்கள்.''

அசுவாரஸ்யமாக அலெக்ஸ் அடுத்த சேனலுக்கு ரிமோட்டில் மாறுகையில் அழைப்பு மணி இசைத்தது. தாள் திறந்த அழகுப் பெண் அதிர்வதற்குள் அவன் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

சுமார் ஆறடி உயரத்தில் மிகவும் வித்தியாசமாகக் காணப்பட்ட ஸ்ரீநிவாஸ குருவிடம் வெறுப்புப் பார்வை வீசினான் அலெக்ஸ்.

''யார் நீ? அந்தரங்க அறைக்குள் எப்படி வந்தாய்?''

ஆறடி உயர மனிதனைப் பற்றி சற்று முன் ஏதோ விவியில் அறிவிப்பு வந்ததே! என்ன அது? சரியாகக் கேட்காமல் போனோமே!

''அலெக்ஸ் உன்னிடம் பேச வந்தேன்.''

''புதியவனே...! முதலில் அனுமதி பெற்று, பிறகு வா.''

''அதற்கெல்லாம் சாவகாசமில்லை. உடனடியாகப் பேசியாகணும்.''

''என்ன?''

''பேரம். வேலைக்காகப் பேரம்.''

''யார் நீ?''

''நீ வேலையை விட்டு நீக்கிய தொழிலாளர்களின் பிரதிநிதி.''

''அங்கீகரிக்கப்படாத எந்த மனிதனுடனும் பேச நான் தயாரில்லை. நீ போகலாம்.''

''மனித உரிமை கேட்க எந்த உலகப் பிரஜைக்கும் அனுமதியுண்டு.''

அப்போது விவியின் அந்தச் சேனலில் ஓம் மர்ம மனிதன் பற்றின எச்சரிக்கை ஒலி பரப்பானது. இந்தத் தரம் அலெக்ஸ், குரு இருவரும் கேட்டார்கள். அலெக்ஸ் அதிர்ந்தான்.

''யார் நீ உனக்கு என்ன வேண்டும்?'' சற்று பயத்துடன் எழுந்தான் அலெக்ஸ்.

''அலெக்ஸ் உட்கார். பெண்களை உள்ளே போகச் சொல்.''

கட்டுப்பட்ட அலெக்ஸ் கண் ஜாடையில் அவர்களை உள்ளே அனுப்பினான்.

''உனக்கு என்ன வேண்டும்?''

''வேலை வேண்டும்.''

''சரி நாளையே தருகிறேன். பேக்டரியில் வந்து பார்.''

**நளினி சாஸ்திரி**

# ஆபத்து...

''வேலை எனக்கல்ல. நீ நிறுத்திய 500 பேருக்கு. திரும்ப அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்.''

''அவர்களை நீக்க அரசு அனுமதி உள்ளது. தவிர, ஓய்வு இல்லத்தில் அவர்கள் வாழ்நாள் முழுதும் போஷிக்கப்படுவார்கள். எந்தக் குறையும் இல்லாத வாழ்க்கை.''

''அலெக்ஸ் சற்று முன் விவியில் எச்சரிக்கை கேட்டியே! சந்தேகமில்லாமல் அரசு தேடும் மனிதன் நான்தான். காணாமல் போனவர்கள் பட்டியலில் நீயும் இடம்பெற வேண்டுமா?''

''யார் நீ? என்னதான் கேட்கிறாய்?'' உயிர் ஆசை பணிய வைத்தது.

''என்னைப் பற்றிப் பிறகு. முதலில் 500 பேருக்கு வேலைக்கான உத்தரவு. அதுவும் இப்போதே!'' குருவின் குரல் அதட்டலாக மாறியது.

பயந்த அலெக்ஸ் உடனே நிர்வாக அதிகாரியை விவியில் அழைத்தான். 500 பேருக்கும் வேலையில் சேர மறுஉத்தரவு பிறப்பித்தான்.

''நீ கேட்டபடி வேலை தந்து விட்டேன் யார் நீ?''

''அலெக்ஸ் பசிக்கிறது. உணவு கிடைக்குமா?'' விவி தேடலால் இனி உணவு நிலையங்கள் போக முடியாது.

''இதோ வருகிறேன்'' என்று உணவறைக்குள் போன அலெக்ஸ், அங்கிருந்த விவியின் மூலம் உடனே வரச் சொல்லி போலிஸுக்குத் தகவல் தந்தான்.

''ஹலோ! உ ள வு த் துறையா?''

''ஆமாம். உதவக் காத்திருக்கிறோம்.''

''நான் அலெக்ஸ் B10011011. விவி எச்சரிக்கை பார்த்தேன். அந்த மர்ம மனிதன் இப்போது என் வீட்டில் இருக்கிறான்.''

''என்னது அவனா? எச்சரிக்கை. அவனை விட்டு விடாதீர்கள். பேச்சுக் கொடுத்து அவன் கேட்பதை எல்லாம் செய்து தாருங்கள். எப்படியாவது தங்க வையுங்கள். உடனே வருகிறோம்.''

**சா**ப்பிட்டுக் கொண்டே அலெக்ஸ் கேட்டான்.

''உன் பெயர்?''

''ஸ்ரீநிவாஸ குரு''

''ஊர்?''

''கோவிந்தம்பாளையம்'' யோசிக்காதே குரு... இனி அலெக்ஸ் இந்த உலகிற்குத் தேவையில்லை.

''உன்னை அரசு ஏன் தேடுகிறது?'' பேச்சை வளர்த்து. நேரம் கடத்து. உளவுத் துறை வந்து கொண்டிருக்கிறது.

''அலெக்ஸ் உடனடியாக எனக்கு ரூ வேண்டும்.'' ரூ இருந்தால்தான் தொடர்ந்து ஓட முடியும்.

''குரு இதோ எடுத்துக் கொள். எவ்வளவு தேவையோ எடுத்துக் கொள்.''





டீ. வி. எதிரொலி நிகழ்ச்சியில் :

" 'செவ்வாய் அன்று ஒலிபரப்பிய நாடகத்தின் போது தடங்கல் ஏற்பட்டதை ஏன் அறிவிக்கவில்லை'ன்னு கேட்டு ஒருத்தர் எழுதியிருக்கார்."

"அறிவித்தோம்... ஆனால் இயந்திரக் கோளாறு காரணமாக அது தெரியாமல் போய் விட்டது!"

– சீர்காழி வி. ரேவதி

கேட்டதெல்லாம் தரச் சொல்லி உளவுத் துறை ஆணை.

''நன்றி அலெக்ஸ் நான் வருகிறேன்'' உதவினவன்; விட்டு விடலாம்.

''குரு உன்னைப் பற்றிச் சொல்லாமல் செல்கிறாயே.''

பேச்சை வளர்த்து.

''என் வயது 518''

''வ்வாட்? 518?''

''ஆமாம் ஐந்து. ஒன்று. எட்டு.''

''எனில், நீ இதுவரை எங்கிருந்தாய் குரு?''

''விவரமாகச் சொல்கிறேன் கேள் அலெக்ஸ்...''

''------ ------ -------- --------
-------- ------ -------- --------
------- ------- -------- --------
------- ------- ------- ---------''

அடுத்த அரைமணியில் போலீஸர், புடைசூழ அலெக்ஸ் வீட்டை முற்றுகை யிட்ட போது, இவ்வுலகில் இருந்ததற்கான தடயமின்றி அலெக்ஸ் மறைந்திருந்தான்.

## முரண்பாடு!

ஜாதிச் சான்றிதழ்படி
மாணவர்களைத்
தேர்ந்தெடுத்த
ஆசிரியர்,
மாணவச் சிறார்களுக்கு
முதலில் வகுப்பறையில்
சொன்னது :
ஜாதிகள் இல்லையடி பாப்பா!

– வி. சி. கிருஷ்ணரத்னம்





''போன் செய்த அலெக்ஸ் எங்கே? ஒரு வெளி மனிதன் வந்தானா?'' போலீஸர் அழகுப் பெண்களிடம் கேட்டார்.

''பால் ஒய்வெடுத்துக் கொண்டிருக்கையில் ஒரு விசித்திர மனிதன் வந்தான். ஆறடி உயரம். திடீரென வேலை கொடு என்றான். எங்களை உள்ளே அனுப்பி விட்டான். பிறகு நடந்தது தெரியாது. வெளியே வந்தால் இருவரும் இல்லை.''

காவலாளி சத்தியமாக அலெக்ஸ் வெளியே போகவில்லை என்றான். உயர மனிதன் ஒருவன் சென்றதாகச் சாதித்தான்.

திரும்ப ஒரு மர்ம மறைதல். கைக் கெட்டியது வாய்க்கு எட்டவில்லை. உடனே அறை பூராவும் லேசர் கண்களால் சலிக்கப்பட்டது.

'ஜுலா அழைக்கிறான்'

'ஆத்மாவுக்கு ஆபத்து'

என்ற கிறுக்கல் எழுத்துக்கள். விவி பிரிண்டரில் 500 பேருக்கான மறு உத்தரவு வேலையில் சேரும்படி தொங்கியது. கம்பெனி நிர்வாக அதிகாரி விவியில் தோன்றினார்.

''காரணம் புரியவில்லை. 500 பேரை உடனே பழையபடி வேலையில் சேர உத்தரவு தந்தார். ஒரு வாரமாய் அவர்கள் போராடி வருகிறார்கள். இது எதிர்பாரா முடிவு.''

வேலைக்காக ஒரு பிளாக்மெயில்.

ஆத்மாவுக்கு எதிராக.

அரசுக்கு எதிராக.

வேலைக்கான ஆர்டர் வாங்கி, அலெக்ஸை மர்ம மனிதப் போர்வையில் கொன்று விட்டார்களா? சாமர்த்தியமான கொலையா? பிளாக்மெயில் என்றால் திட்டமிட்ட செயல். இதற்கு முந்தைய மறைதல்களில் காரணம் இல்லை. இது வேறு கேஸோ?

இல்லை. அதே மனிதன் இங்கும் வந்திருக்கிறான். ஒரு மனிதன் மட்டும் வெளியேறியதற்குத் தெருவில் சாட்சியம் இருக்கிறது. என்றால் அலெக்ஸ் எங்கே? 10 நிமிடத்தில் ஓர் உடலை என்ன செய்து விட முடியும்?

பெயர் தெரியாத அந்த மர்ம மனிதனைப் பிடித்தாக வேண்டும். அவன் தொடர்ந்து நடமாடுவதில் சிக்கல் அதிகமாகும். உளவுப் படை அனைத்துப் பிரிவுக்கும் செய்தி பறந்தது.

ரோபோ நாய் ஃபெர்மோன் அணுவைலை ருடன் மோப்பம் பிடித்தது. தெரு முகர்ந்து, தெரு தடவி, பக்கத்துத் தெரு போய், வான டாக்ஸி ஸ்டேண்ட்-டில் நின்றது.

''இங்கிருந்து பறந்து விட்டான்'' என்று கண்ணடித்தது.

புதிய பாதை ரிலீஸ் ஆன சூட்டில், அந்த பாதிப்பில், அதே நிறுவனத்தால் ஆரம்பிக்கப் பட்ட படம்.

கதை, திரைக்கதை, டைரக்ஷன், நடிப்பு சகலமும் யூகிசேது. அவரும் என்னென்னவோ பண்ணிப் பார்த்திருக்கிறார். கொஞ்சம் அபூர்வ ராகங்கள், கொஞ்சம் சிந்து பைரவி, (கேளடி கண்மணி பாதிப்பில்) உதடு ஒட்டாத பாடல், கொஞ்சம் சலங்கை ஒலி, சொச்சம் புதிய பாதை என்று ஒரே 'கலக்கல்' மயம்.



# மாதங்கள்-7

ரம்யாகிருஷ்ணன் காதலிக்க ஆரம்பித்த பிறகாவது கொஞ்சம் சூடுபிடிக்குமாக்கும் என்று பார்த்தால் 'விடுவேனா' என்று அடுத்த செகண்ட் 'டு'.

படத்தில் ஒரு மகா காமெடி உண்டு. ரம்யா வயிற்றில் வளருகிற குழந்தை, இவர் புல்லாங்குழல் வாசித்தால்தான் கவனிக்குமாம்! ஏதாவது கேட்டால் வயிற்றிலிருந்து அபிமன்யூ பாடம் கேட்கவில்லையா என்று வலுவான ஆர்க்யூமெண்ட் எடுத்து விடுவார் போலும்.

தியேட்டருக்குள் வருடங்கள் 7 உட்கார்ந்திருப்பது போன்ற பிரமை.

– ஆர்.பி.ஆர்.

அதற்குள் அறையில் கிடைத்த ரேகை மத்திய கம்ப்யூட்டரில் அலசப்பட்டு, பெயர் முகவரி தெரியாமல் திரும்பி வந்தது.

5ம் எண் டாக்ஸி கிழக்குத் திசையில் உயர மனிதனுடன் 15 நிமிடம் முன் பறந்ததாகத் தகவல் கிடைத்தது.

டாக்ஸி எண் 2XY - 560A260

டாக்ஸி பைலட் ஜான்.

உடனே, கிழக்குத் திசை ஊர்கள் அனைத்திற்கும் தகவல் பறந்தது. வான டாக்ஸிகளில் விவி பொருத்தப்பட்டிருந்ததால் மறுமுறை மர்ம மனிதன் குறித்து மறு எச்சரிக்கை செய்தார்கள். ஜான் உடனே தகவல் தரும்படி கேட்டுக் கொள்ளப் பட்டான்.

இதற்குள் உலகம் பூராவும் பரவலாக விஷயம் பரவியது. அரசு எதிர்ப்பு இயக்கத்தினர் விவி பிரத்யேகச் சேனல்களில் ஆத்மாவிடம் கேள்வி கேட்டார்கள்.

''மறைவுக்கு ஆத்மா பொறுப்பேற்றால் போதுமா? உயிருக்கு என்ன உத்திரவாதம்?''

''ஒரு தனி மனிதனைப் பிடிக்க இத்தனை நாளா? கம்ப்யூட்டர்கள் தூங்குகின்றனவா?''

''கம்ப்யூட்டர் ஆதிக்கம் ஒழிக.''

அதே சமயம், மக்கள் மத்தியில் ஒருவித பய உணர்வு ஆக்ரமித்தது. உலகில் குற்றங்களே இல்லை என்ற நிலை மாறி திடீர் திடீர் என மக்கள் மறைவதும், உலகின் மூலை முடுக்கெல்லாம் எலக்ட்ரானிக் கண் கொண்ட உளவுத் துறை அதன் மர்மம் விளங்காமல் விழிப்பதும் புதிய அனுபவம்.

''முந்தா நாள் சோட்டி
நேற்று ஷில்லி
இன்று அலெக்ஸ்!
நாளை யார்?
ஆத்மாவா?''

என்ற கேள்விக்குறியுடன் போஸ்டர்கள் அரசு எதிர்ப்பியக்கத்தால் பரவலாக உலகம் பூராவும் ஒட்டப்பட்டன.

வான டாக்ஸி எண் 2XY - 560A260,600 கி.மீ. வேகத்தில் காற்றைக் கிழித்துக் கொண்டிருந்தது.

''ராக்கெட் ஸ்டேஷன் போவதற்குள் விவி பார்க்கிறீர்களா'' என்ற பைலட் ஜான் விவி இயக்கவும் அதில் குரு பற்றின எச்சரிக்கை ஒளிக்கவும் சரியாக இருந்தது. குருவும் ஜானும் ஒருவரை ஒருவர் அர்த்தத்துடன் பார்த்துக் கொண்டார்கள்.

(தொடரும்)

மரணம். துல்லியமான மரணம்.

தரையில் ரங்கோலிக் கோலம் போல இரத்தம் பரவியிருந்தது. உடலை வளைத்த படி அந்தப் பெண் இறந்து போயிருந்தாள்.

அவள் பெயர் என்ன? வினோதினி. செல்லமாய் வினோ. இப்போது சடுதியில் செத்துப் போய் விட்டாள். காரணம் என்ன? தற்கொலை. கிரிஸ்டல் ஓலியரான தற்கொலை.

இன்ஸ்பெக்டர் தேவராஜன் நிமிர்ந்து பார்த்தார். அவர் எதிரே மிக பவ்யமாகக் கண்களில் சோகமுலாம் பூசிக் கொண்டு நின்ற அஷோக் மெதுவாகக் கரகரத்த குரலில் சொன்னான்.

''என்னால நம்பவே முடியலை இன்ஸ்பெக்டர். என் வினோதினியா செத்துப் போயிட்டா... கனவு மாதிரி இருக்கு சார். அவளுக்கு என்ன குறை வைச்சேன் நான்?''

''ஆல்ரைட். காம் டவுன். தோபாருங்க மிஸ்டர் அஷோக். என்ன நடந்தது, சொல்லிருங்க எல்லாத்தையும் துப்புரவா. இல்லைன்னா அப்புறம்... யு நோ வி ஆர் பொலீஸ் பீப்பிள்'' என்றார்.

# தடயம்

வினோதினி ஏழாவது மாடியின் விட் அவுட்டிலிருந்து விழுந்திருந்தாள். விழுவதற்கு முன் முன்னேற்பாடாக 'தற் கொலைக் கடிதம்' எழுதி வைத்து விட்டு விழுந்திருக்கிறாள்.

தற்கொலைக்கான காரணம்? அஷோக் அவரிடம் சொன்னான். ''என்னன்னு எவக்கும் புரியலை சார்... ஒத்தைத் தலைவலி மாதிரி பீரியட் சமயத்துல வருது. தாங்கிக்க முடியாத மரண வலின்னு சொல்லுவா. டாக்டர்கிட்டே கன்சல்ட் பண்ணலாமான்னு கேட்டபோதெல்லாம் பிடிவாதமா மறுத்திட்டா.''

''இஸிட்... ட்ரீட்மென்ட் எடுத்துக் கலைன்னு எப்படி மிஸ்டர் அஷோக் உங்களால இப்படி கூலா சொல்ல முடியுது. உங்க மனைவியோட உடல்நிலை பத்தி உங்களுக்கு அக்கறையில்லையா?''

''அவ பிடிவாதம் பத்தி உங்களுக்குத் தெரியாது சார். நான் ஆபீஸில இருந்தப்ப எனக்கு ஃபோன் பண்ணி, தலைவலி தாங்காம தற்கொலை பண்ணிக்கப் போறதாச் சொல்லிட்டுத்தான் இந்தக் காரியத்தைப் பண்ணியிருக்கா'' என்றான். இன்ஸ்பெக்டர் தேவராஜன் நெற்றியில் விரலைச் செலுத்தி யவாறே யோசித்தார். இறந்து போயிருந்த வினோதினியைச் சுற்றி சாக்பீஸில் கோடு கிழித்தனர். நிக்கான், மாமியாக்கள் ஃப்ளாஷின. செய்தி கேட்டு அக்கம் பக்கத்தவர்களை வேட்டையாடத் துவங்கினர்.

''எப்படி.. மிஸ்டர் அஷோக்... உங்களுக்கு உங்க மனைவி இறந்து போறதுக்கு முன்னாடி ஃபோன் பண்ணினாங்களா?''

''யெஸ்... என்னைச் சந்தேகப்படறீங்களா?'' என்றான் நேரடியாய்.

''சேச்சே... பொதுவா எல்லார் மேலேயும் நாங்க சந்தேகப்பட்டுத்தான் ஆகணும். அவங்க எங்கேயிருந்து ஃபோன் பண்ணினாங்கன்னு சொல்லுங்க அஷோக்.''

''நான் இன்னும் சொல்லலையே இன்ஸ்பெக்டர். அதே கேள்வியைத்தான் நானும் அவகிட்டே கேட்டேன். அவ வெளியே எங்கேயோ பப்ளிக் பூத்ல இருந்து பேசறதாச் சொல்லி மழுப்பிட்டா.''

''உடனே ஏன் நீங்க போலீஸுக்கு தகவல் தெரிவிக்கலை?''

''பயம்தான் காரணம் இன்ஸ்பெக்டர். உடனே வீட்டுக்கு ஓடி வந்தேன். ஆனா அதுக்குள்ளே... என் வினோதினி...'' - மெலிதாய்க் கண்கலங்கினான் அஷோக். அவனிடமிருந்து ஸ்டேட்மென்ட் வாங்கச் சொல்லி விட்டு வெளியே வந்து தன் புல் லட்டை உதைத்தார் தேவராஜன்.

தற்கொலை பண்ணிக் கொண்டிருந்திருப்பாளா அந்த வினோதினி. மனதில் கேள்வி உறுத்தியது.

வினோதினி ஆம்புலன்ஸில் எடுத்துச் செல்லப்பட்டாள். அவளது முகத்தில் சாவின் கோரம் தென்படவில்லை. பின் மண்டை லேசாய் உடைந்திருந்தும் இப்போதுதான் பூத்த ரோஜா போல், தூங்குகிற பாவனையில் இருந்தாள். அஷோக்கிடம் ஏதோ தப்பு இருப்பதாகத் தோன்றியது அவருக்கு.

சாத்தியமில்லை. காஸ்ட் அயர்ன் அலிபை வைத்திருக்கிறான். அவன் ஆபீஸில் இருக்கிற போது ஃபோன் வந்திருக்கிறது. உடனே வீட்டுக்கு வருகிறான். அதற்குள் ஏழாவது மாடியிலிருந்து விழுந்து இறந்திருக்கிறாள் வினோதினி.

அவன் ஆபீஸில் இருந்ததற்கு ஏதேனும் சாட்சி உண்டா? இருந்தால், ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வருவதற்கு எவ்வளவு நேர

---

ஜாஜயந்திலா

மாகும்?

கேள்விகள்... கேள்விகள்...

அப்புறம் அவளது தற்கொலைக் கடிதம். எங்கோ ஒரு நூலிழை இடறுகிறது. பெண்ணே! சொல். சொல்லிவிடு. நீ எப்படி இறந்து போனாய். கொலையா? தற்கொலையா?

அப்புறம்...

அவனது ஆபீஸில் விசாரித்தார்.

கோவை காந்திபுரம் போகிற வழியில் இருக்கிறது அவன் அலுவலகம். அவனை அங்கே பதினோரு மணி வரை பார்த்ததாய்ச் சத்தியம் செய்தார்கள். 11:30க்கு தனது மானேஜருக்கு ஒரு பர்மிஷன் விண்ணப்பம் எழுதி அனுப்பி விட்டு யாரிடமும் சொல்லாமல் புறப்பட்டிருக்கிறான். 12:00 மணிக்கு வீட்டுக்கு வருகிறான். இங்கே தான் இடிக்கிறது. அவனது யமாஹாவில் பத்தே நிமிடத்தில் வீட்டுக்கு வந்து விட முடியும். இருபது நிமிடம் அதிகப்படியாய் ஆகியிருக்கிறது. அஷோக்கிடம் கேட்டால் 'டிராஃபிக் ஜாம்' என்



கிறான். எது உண்மை? டிராஃபிக் ஜாம் ஆக வாய்ப்பிருக்கிறது. ஆனால் அந்த நேர இடைவெளியை வைத்துக் கொண்டு 'குற்றம்' பண்ண முடியுமா? அந்தளவு சாமர்த்தியம் இருக்கிறதா அஷோக்கிடம்.

போஸ்ட்மார்டம் அறிக்கை வந்தவுடன் மெலிதான திகைப்பு ஏற்பட்டது. வினோதினி கொலை செய்யப்பட்டிருக்க வாய்ப்பில்லை. ஏழாவது மாடியிலிருந்து தவறி விழுந்தோ அல்லது தற்கொலை செய்து கொண்டோ இருக்கலாம். வினோதினியை எடுத்த புகைப்படங்களும் அதையே உறுதிப்படுத்தின. அவளது தற்கொலைக் கடிதம் அலசப்பட்டது. துல்லியமாய் அது அவளது கையெழுத்துதான். தேவராஜன் திகைத்தார். அவன் மீதுதான் தப்பு இருக்கிறது. எப்படி கனெக்ட் செய்வது அவனை? துளியும் சாட்சியங்களோ, தடயமோ இல்லாத போது. பக்கத்து பிளாட்காரர்கள் யாரும் அவர்களிடம் பழகியிருக்கவில்லை. அஷோக்கிற்கு வேறு ஏதாவது கெட்ட பழக்கங்கள்? இல்லையென்றால் ஏதாவது தகாத தொடர்புகள்? அப்படி ஏதும் இருக்காது என்றார்கள்.

வெளியில் நல்லவன் போல வேஷம் போட்டிருந்திருக்கிறான். என்ன செய்யலாம். விடாதே, நிதானமாய் யோசி. நடந்தவைகளை மறுபடி ஒவ்வொன்றாக அசை போட்டுப் பார். ஏதாவது தடயம் விடுபட்டிருக்கலாம் என்றது மனது.

தேவராஜன் யோசித்தார்.

வீட்டிற்கு வந்தும் யோசித்தார். சாப்பாட்டில் மனது நிலையாமல் விரல்களால் அளைந்தார். அவர் மனைவி ஜோதா மெலிதாய்த் தலையில் குட்டினாள்.

''என்னாச்சு உங்களுக்கு? சாப்பாட்டு தட்டில என்ன எழுதறீங்க?''

''எழுதறேனா இல்லையே.''

''விரலை வைச்சுக் கோடு கோடா என்னமோ எழுதறீங்களே. என்ன.. ஏதாவது கேஸ் விஷயமா... வீட்டுல பெண்டாட்டின்னு ஒருத்தி காத்துக்கிட்டு இருப்பாளேங்கற எண்ணமெல்லாம் இருக்காதே அய்யாவுக்கு.''

''சேச்சே...'' என்றார். சாப்பிட்டு டவலால் துடைத்து விட்டு எழுந்தார். வழக்கமான 'மூடு' இருந்தால் ஜோதாவின் முந்தானை டவலாகியிருக்கும்.

அப்புறம்...

படுக்கையில் சாய்வாகத் தலையணைகளை வைத்துப் படுத்துக் கொண்டிருந்த ஜோதா திரும்பி, தன் கணவனைப் பார்த்தாள். தேவராஜன் யோசனையாக நெற்றியை நீவிக் கொண்டிருந்தார்.

''ம்... ஐயாவுக்கு மூடு இல்லையோ... நல்லவேளைப்பா நான் தப்பிச்சேன். இல்லைன்னா என் உடம்புல உங்க விரல்கள் கோடு போடத் தொடங்கியிருக்கும்...'' என்றாள் கேலியாக.

''என்ன... என்ன சொன்ன ஜோ?'' என்றார் பரபரப்பாக.

'டிட்டோ'வினாள் ஜோதா.

விருக்கென்று எழுந்து உடை மாற்றத் துவங்கினார்.

''என்னாச்சுங்க?''

''வந்து சொல்றேன்'' என்று வெளியே வந்த தேவராஜன், தமது ஸ்டேஷன் ரைட்டர் சேவியரிடம் கேட்டார்.

''உங்களுக்கு ஸ்டெனோகிராபி தெரியும்தானே சேவியர். ஐ மீன் ஷார்ட் ஹாண்ட்...''

''என்ன சார். தெரியுமே. என்ன விஷயம்?''

''இதைப் பாருங்க. செத்துப் போய்க் கிடக்கிற வினோதினியோட இடது கையில உள்ள சிராய்ப்புகள். இதை கவனமா பாருங்க, ஏதாவது புரியுதான்னு.''

அவர் காட்டிய போட்டோவைப் பார்த்த சேவியர் உற்சாகத்தில் கூக்குரலிட்டார்.

''சார்... அந்தப் பொண்ணு ஏதோ கூரான கண்ணாடிச் சில்லை வைச்சு எழுதியிருக்கு. த பாருங்க ஷார்ட்ஷாண்ட்ல 'என் சாவுக்கு என் கணவன்தான் காரணம். இது ஒரு கொலைதான்'னு எழுதி வைச்சிருக்கா... இதை எப்படி கவனிக்காம விட்டோம்? பார்க்கச் சாதாரண சிராய்ப்புக் காயம் மாதிரி இருக்கு.''

ஃபாரன்சிக் ஆசாமிகளிடம் விஷயத்தைத் தெரிவித்து வினோதினியின் உடலைப் பார்க்கச் சொன்ன போது கருஞ்சிவப்பாய் ரத்தம் கெட்டிப்பட்ட அந்த சிராய்ப்புகள் அதையே உறுதிப்படுத்தின.

''இதில சட்டச் சிக்கல் ஏதும் வருமான்னு தெரியலை. ஐ'ல் காட்ச் ஹிம்'' என்ற தேவராஜன் உயர் அதிகாரிகளுக்குத் தகவல் தெரிவித்து விட்டு, அஷோக்கின் வீட்டை அடைந்தார்.

''என்னாச்சு இன்ஸ்பெக்டர். அதுவும் இந்த ராத்திரியில.''

''பிடிச்சாச்சு குற்றவாளியை'' என்று கட்டுவிரல் உயர்த்தினார். அதன் பிறகு -

வீட்டிற்கு வந்த தேவராஜனை முறைத்தாள் ஜோதா.

''தாங்க்ஸ் ஜோக் குட்டி. கண்டுபிடிச்சாச்சு. எந்தப் பெண்ணிலும் இல்லாத ஒன்று'' என்றார்.

''என்னது?''

''தடயம்'' என்ற தேவராஜனை, ஜோதா தன் கைகளால் கைது செய்ய ஆரம்பித்தாள்.



# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனெண்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம்:1990
பதிவு அலுவலகம்:60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதரிப்பேட்டை, சென்னை-600 002.
கிளை அலுவலகம்:36, ஜீனிஸ் ரோடு, சென்னை-600 015.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 45 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும் உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மணி பேக் திட்டம்

| வைப்புத்தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ.6,330/- | ரூ.6,000/- | ரூ.6,000/- | ரூ.56,330/- |
| ரூ.12,640/- | ரூ.12,000/- | ரூ.12,000/- | ரூ.1,12,640/- |
| ரூ.25,280/- | ரூ.24,000/- | ரூ.24,000/- | ரூ.2,25,280/- |
| ரூ.50,560/- | ரூ.48,000/- | ரூ.48,000/- | ரூ.4,50,560/- |

## பொற்குவியல் திட்டம்

ரூ.100 மட்டுமே பிரதி மாதம் செலுத்தி 25 வருட முடிவில் ரூ.3,00,000 பெறுவீர்!

## பென்ஷனர் நல்த்திட்டம்

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்

| | | |
|---|---|---|
| ரூ.10,000/-மும் அதற்கு மேலும் | 12 மாதங்கள் | வட்டி 19.5% |
| ரூ.10,000/-க்கு கீழ் | | வட்டி 18.5% |

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

மாதம் ஒன்றுக்கு ரூ.25-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்

| மாதம் | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 80 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா. இதோ
ரூ.7500ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,25,000 பெறலாம்
ரூ,9000 ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,50,000 பெறலாம்
• சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

## கடன்

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்.
சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விதம் ரூ.1.85

(Friday Weekly Holiday)
பங்குதாரர்களுக்கு மட்டும்
*Business Hours*
*Week Days 9 A.M. - 12 Noon &*
*2.30 P.M. - 6.00 P.M.*

சேர்மன் P. பாலசுப்பிரமணியம் B.Sc.
சீனியர் டிரஸ்டி
ஸ்ரீ கந்தகோட்டம்
சென்னை-3.

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

SURESH

1

சபரியில் நல்ல பால் பெரிய பெரிய பாத்திரங்களில் மிதமாக சூடாகிக் கொண்டிருந்தது. நடு முதுகில் கூனும், காட்ராக்ட் கண்ணாடியுமாய் இருந்த விசாலிப் பாட்டி, வறுத்த காப்பிக் கொட்டையை கவர்க் கோழி ரீங்காரத்துடன் பொடியாக்கிக் கொண்டிருந்த இயந்திரத்திற்கு எதிரில், பரீட்சை ரிசல்ட் எதிர்பார்க்கும் மாணவி போல் லேசான கவலை முகத்துடன் நின்றிருந்தாள். காப்பிக் கொட்டை மிஷின் பொடியை உதிர்த்தது. அதை உள்ளங்கையில் ஏந்தி நிரடினாள்.

# மடிமீது தலை வைத்து...

காப்பிப் பொடி, ஃபில்டரில் போடுவதற்குத் தோதாக, ரொம்பவும் நைஸாக இல்லாமல், ரொம்பவும் ரவையாக இல்லாமல் நடுவாந்தரமாக இறங்கியதைப் பார்த்த பின்தான் அவள் முகத்தில் புன்னகை வந்தது.

திரும்பினாள். அவள் என்ன சொல்லப் போகிறாளோ என்று அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு பச்சை பாண்ட்டும், வெள்ளைச் சட்டையும் அணிந்த நான்கைந்து சிறுவர்கள் நின்றிருந்தார்கள். அத்தனை பேருக்கும் பன்னிரண்டில் இருந்து பதினான்கு வயதுக்குள்தான் இருக்கும்.

விசாலிப் பாட்டி வலது கை கட்டை விரலையும் கட்டு விரலையும் சேர்த்து வட்டம் போல் ஆக்கி, முழங்கையை உயர்த்தி, ஒரு குலுக்கலுடன் கூடிய அசை அசைத்தாள்.

''காப்பி சக்ஸஸ்'' என்றான் சிறுவர்களில் ஒருவன். அந்த இரு வார்த்தைகளும் அந்த சமையல் கூடத்தில் இருந்த ஒவ்வொருவரிடமும் தூது போய், வதந்தி பரவுவது போல் பரவி, வெளியில், சாலையில் நின்று கொண்டிருந்த கஸ்தூரிரங்கனின் காதில் வந்து விழுந்தது.

''ரங்கா, காப்பி சக்ஸஸ்.''

கஸ்தூரிரங்கன், 'அப்பாடா' என்று ஒரு நிம்மதிப் பெருமூச்சு விட்டான். விசாலிப் பாட்டி காப்பி சக்ஸஸ் என்று சொல்லி விட்டால், அன்றைக்கு சபரியில் தயாராகும் எல்லாமே சக்ஸஸ் என்று ஒரு நம்பிக்கை கஸ்தூரிரங்கனிடமும் மற்றவர்களிடமும் ஒட்டிக் கொண்டிருந்தது.

சபரிக்கு விசாலிப்பாட்டி வந்து சேர்ந்தது முதல் இன்று வரை காப்பி கலக்கும் வேலைதான்.

'ஒருநாள் எனக்குச் சரியாக் காப்பி அமையாமப் போயிடிச்சின்னா அவ்வளவுதான். அன்னிப் பொழுது முழுக்க நான் எதைத் தொட்டாலும் அது சரியா வராது' என்று விசாலிப்பாட்டி என்றைக்கோ ஒரு நாள் சொல்லி இருக்கிறாள். கஸ்தூரிரங்கன் மனத்திலும் அந்த வாக்கியம் ஆணி வைத்து அறையப்பட்டிருந்தது. ஆனால் இதுவரை ஒருநாளும் விசாலிப்பாட்டிக்கு காப்பியில் தோல்வியே இல்லை. அதனால் சபரியிலும் எல்லா நாட்களும் நல்ல நாட்களாகவே நடந்து கொண்டிருந்தன.



கஸ்தூரிரங்கன் உற்சாகமானான். அவனுக்குப் பக்கத்தில் நின்றிருந்த வேனில் இருந்த ஆறுமுகத்தையும் அந்த உற்சாகம் தொற்றிக் கொண்டது. வேனின் ரப்பர் பந்து ஹாரனை ஒருமுறை அழுத்தினான். 'பவ்வய்ங்க்' என்றது தப்பித்த காற்று.

'பவ்வய்ங்க். பவ்வ்வ்வய்ங்க். பவ்வய்ங்க்'

''வருது, வருது... எல்லாமே - ஒன்ணொண்ணா - வருது'' என்று சபரியின் விலாப்புறத்தில் இருந்த கதவு வழியாகக் கடலைப் பருப்பு மாவுடன் வெளிப்பட்ட பாலு, சினிமாப் பாட்டு மெட்டில் பாடிக் கொண்டே வந்து பாத்திரத்தை வேனில் வைத்து விட்டு மறுபடி உள்ளே ஓடினான். அவனுடைய பதினான்கு வயதுப் பருவம் அவனைத் துள்ளிக் குதித்து ஓட வைத்தது.

கஸ்தூரிரங்கன் வேனைச் சுற்றி வந்தான். டயர்களைத் தட்டிப் பார்த்தான். காற்று இருந்தது. வேனின் உடலில் எழுதப்பட்டிருந்த 'சபரி நடமாடும் உணவகம்' எழுத்துக்களின் மீது முதல் நாள் தூசி துடைக்கப்படாமல் இருந்தது. வேனுக்குள் ஏறி, ஒரு துணி எடுத்து வந்து தூசியைத் துடைத்தான்.



சரியாக ஐந்து மணிக்கு வேன் புறப்பட்டு விடும். வேனை ஓட்ட ஒரு பீடி சிங்காரம். ஸ்கூல் பஸ் ஓட்டி ரிடையரானவர். இப்போது இதை ஓட்டிக் கொண்டிருந்தார். வலது மணிக்கட்டில் உட்புறம் டயல் வைத்து ஃபேவர்லூபா வாட்ச் கட்டும் ஒரே ஃபேவர்லூபா அபிமானி.

வேனில் இருந்து ஒரு துரு கூட அவருக்குத் தெரியாமல் எங்கேயும் போய் விட முடியாது. இப்போது வேனுக்குப் பத்தடி தள்ளி நின்று சிறுவர்களுக்குத் தெரியாமல், உள்ளங்கை மறைப்பில் புகையும் பீடி ஒன்றை வைத்துக் கொண்டு அவ்வப்போது இழுத்துக் கொண்டிருந்தார் - திருட்டுத்தனமாக.

வேனில் அன்றைய தேவைக்கான மாவு, எண்ணெய், பால், காஸ் என்று சகலமும் ஏறியவுடன் ஹாரன் அழுத்திக் கொண்டிருந்த ஆறுமுகம் வேனில் இருந்து இறங்கி டயர்களுக்குக் கீழே எலுமிச்சம் பழங்களை வைத்தான். கற்பூரம் காட்டித் தேங்காயைச் சிதறுகளாக்கினான்.

டிரைவர் கியரைப் போட்டார். ஆறுமுகம் சைடில் அமர்ந்து முன்னும் பின்னும் பார்த்து 'ரை, ரைய்ட்' என்றான். கஸ்தூரிரங்கன் கையசைத்தான். நடமாடும் உணவகம் புறப்பட்டு விட்டது. அது சென்னையில் சில புறநகர்ப் பகுதிகளுக்குச் சென்று பஜ்ஜி, முறுக்கு, போண்டா, இட்லி, தோசை, சப்பாத்தி, பூரி, காப்பி என்று விற்று விட்டு வரும். அங்கெல்லாம் இப்போதிருந்தே சபரிக்காகக் காத்திருக்கத் தொடங்கி இருப்பார்கள்.

**க**ஸ்தூரிரங்கன் விலாப்பக்கக் கதவு வழியாகச் சபரியில் நுழைந்தான். அது அகலமான சமையற்கட்டில் கொண்டு போய் விட்டது. விசாலிப்பாட்டி, நடுங்கும் குரலில் 'சின்னச் சின்ன ஆசை'யைப் பாடிக் கொண்டே முதல் காப்பியை ஆற்றிக் கொண்டிருந்தாள். காவேரிப் பாட்டி காஸ் அடுப்பின் மேல் இட்லிப் பானையை ஏற்றிக் கொண்டிருந்தாள். கோமதிப் பாட்டி கை முறுக்கு சுற்றிக் கொண்டிருந்தாள். காமுப் பாட்டி அன்றைய ஸ்பெஷலான ஜாங்கிரியைப் பிழிந்து கொண்டிருந்தாள்.

பையன்கள் சுறுசுறுப்பாக ஓடினார்கள். வானத்தில் நட்சத்திரங்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாய்த் தெரிய ஆரம்பித்து விட்டால் சபரியில் கூட்டம் சேர ஆரம்பித்து

விடும். வருகிறவர்களின் தேவைக்குத் தக்க படி கிண்டிக் கிளறிக் கொடுத்துப் புன்னகை மாறாமல் பரிமாறி அனுப்ப வேண்டும்.

கஸ்தூரிரங்கன் நடராஜனைத் தேடி னான். கண்ணில் படவில்லை. மகானு பாவன். இன்னும் மிதந்து தூங்குகிறானோ என்னவோ. அவனை அப்புறம் பார்க்கலாம் என்று பாத்ரூமில் நுழைந்தான். குளித்தான். உடை மாற்றினான். கண்ணாடி முன் நின்றான். கண்ணாடி முகம் முப்பத்து நான்கு வயதைச் சொல்லவில்லை. இன்னும் இளமை ததும்பிக் கொண்டிருந்தது. எவ்வ ளவு சீவினாலும் முன்பக்கம் வந்து புரண்ட முடியில் ஒரு வசீகரம் இருந்தது. லேசாகப் பவுடர் போட்டு முகத்துக்களையை மேலும் கூட்டினான். தன் அறையிலிருந்து வெளியே வந்தான்.



"லீவு நாள்ல புல் பால் இல்லைன்னு சொல்றே...?"
"அது பேங்க் லோன்ல வாங்கின மாடுங்க; லீவு நாள்ல கறக்க மாட் டேங்குது...!"
- ரிஷ்யமுகன்

அவன் வருவதும் போவதும் தெரிந் திருந்தாலும் மனத்தில் மரியாதையை வைத் துக் கொண்டு, தங்களுடைய வேலையே குறியாக இருந்த பாட்டிகளைப் பார்த்தான்.

வாழ்க்கையில் எதிர்ப்புகளும், எதிர் பாராத துன்பங்களும் ஏற்படுவது இயல்பே. சில சமயங்களில் தோல்வியையும் எதிர் பார்க்க நேரிடலாம். தோல்விகள் நம்மைச் சம்மட்டிகளால் தாக்கலாம். ஆனால் அதற் காக மனம் தளராமல், ஊக்கம் குறையாமல், காரியங்களில் ஈடுபட்டால் வாழ்க்கை ஒரு சொர்க்க பூமி.

இந்தப் பாட்டிகள் அப்படித்தான் வாழ் கிறார்கள். அதனால் இந்த வாழ்க்கையும் அவர்களுக்குச் சொர்க்க பூமியாகத்தான் இருக்கிறது.

கஸ்தூரிரங்கன் மனநிறைவோடு, புகை சூழாத சமையல் கூடத்தில் இருந்து வெளிப் பட்டு, நியான் விளக்கு ஸ்விட்சைப் போட் டான். எட்டிப் பார்த்தான். அவன் எட்டிப் பார்த்த இடத்தில் இருந்து நியான் விளக்கு போர்டு தெரிந்தது.

ராமாயணத்து சபரிக்கிழவி, மரவுரியும் அம்பறாத்தூணியும், உயர்ந்த கொண்டை யும் கொண்ட ராமனுக்கு இலந்தைப்பழம் ஊட்டி விடும் காட்சியை நியான் கோடுகள் ஒளிர் சிவப்பாய், பளிச் நீலமாய் மாற்றி மாற்றிக் காட்டிக் கொண்டிருக்க, சபரி என்ற எழுத்துக்கள் கவரும் பச்சையில் ஒளிர்ந்து கொண்டிருந்தன.

கஸ்தூரிரங்கன், 'காஷ்-கவுண்டர்' அடைந்து ஒரு கொத்து ஊதுபத்தி ஏற்றி வைத்து விட்டுத் தன் சாம்ராஜ்யத்தை நோக் கினான்.

அவனுடைய ரெஸ்டாரண்ட் சென்னை, பெஸண்ட் நகர் கடற்கரைப் பகுதியில் விசாலமான மணற்பரப்பில் அமைந்திருந் தது. தலைக்கு மேலே கான்வாஸ் கூரை. கான்வாஸ் கூரை இன்றி, வானமே கூரை யாகக் கொண்ட பகுதி. எல்லாவற்றையும் அடர்காற்றில் இருந்தும், பொடி மணலில் இருந்தும் பாதுகாக்கும் பொருட்டு சுற்றி வளைத்து அமைக்கப்பட்டிருந்த வண்ண ஓவியங்கள் கொண்ட கான்வாஸ் வேலிச் சுவர். பாலிமர் நாற்காலிகள். மேஜைகள். புல்வெளி. சீசாப்பலகை. மினி ராட்டினம். சர்ரென்று மகிழ்ச்சி ஆர்ப்பாட்டத்துடன் சறுக்க ஓர் சறுக்குப் பலகை. புகுந்து புகுந்து புறப்பட பெயிண்ட் அடித்த கிளிக்கூண்டு. ஒளிர்ந்த ஃப்ளாரஸண்ட் விளக்குகள். வெளிச்சத்தை அடக்கி, இருட்டின் அழகைக் காண்பித்த பந்து ஷேட்கள்.

மாலை அழகாய் ஆரம்பித்திருந்தது கஸ்தூரிரங்கனுக்குத் திருப்தியாய் இருந் தது.

வாக்கிங் ஸ்டிக்குகளும், பாமரேனியன் நாய்களுமாய், கிழவர்கள் பாலிமர் நாற் காலிகளை அங்கங்கே நிரப்பி இருந்தார்கள். பையன்கள் அவர்களுக்குப் பணிவாகக் காப்பி தம்ளர்களைக் கொண்டு போய் வைத் தார்கள். சர்க்கரை கூடுதலாகக் கேட்பவ ருக்குக் கூடுதலாக. ஸ்ட்ராங்காய்க் கேட்ப வர்களுக்கு ஸ்ட்ராங்காய். டிகிரி காப்பி. ஷுகர் பேஷண்டுகள் என்று அறியப் பட்டவர்களுக்கு மட்டும் எக்காரணத்தைக் கொண்டும் சர்க்கரை கண்ணில் காட்டப்பட மாட்டாது.

சிலர் உட்கார்ந்தவாறே கைகளை ஆட் டினார்கள். கஸ்தூரிரங்கன் கையசைத்தான். சிலர் 'சௌக்கியமா?' என்று சைகையில் வினவினார்கள். கஸ்தூரிரங்கன் சிரித்து 'சௌக்கியம்' என்று திருப்பி சைகை செய் தான்.

நகர்ந்தான். புதிதாகக் கல்யாணமாகி, புதிதாகக் குடித்தனம் தொடங்கியிருந்த மோகன் கெய்க்வாடிற்கு வாழ்த்துக்களைத் தெரிவித்தான். மோகன் கெய்க்வாட் மனை வியை அறிமுகப்படுத்தினான்.




# டி.யு.சி.எஸ். - காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி

## சென்னை

*தரமான பொருள்! சரியான எடை!*
*நியாயமான விலை!*

90 ஆண்டு காலமாக சென்னை மற்றும் புறநகர பொதுமக்களுக்கும், வாடிக்கையாளர்களுக்கும் எங்கள் கூட்டுறவு நிறுவனம் நன்முறையில் சேவை செய்து வருவது யாவரும் அறிந்ததே!

உற்பத்தி செய்யப்படுகின்ற இடத்திலேயே கொள்முதல் செய்து குறைந்த விலையில் மளிகைப் பொருட்களை எமது சிறப்பங்காடி மற்றும் சுய-சேவைப் பிரிவின் மூலமாக வாடிக்கையாளர்களுக்கு வழங்கி வருகிறோம்.

திருமணம் மற்றும் இதர சுப நிகழ்ச்சிகளுக்குத் தேவைப்படும் அனைத்துப் பொருட்களையும் சுத்தமாகவும், நியாயவிலையிலும் அவரவர்கள் இல்லங் களுக்கு எங்களது ஊர்தி மூலமாக கட்டணம் இன்றி சப்ளை செய்கிறோம்.

எங்கள் நிறுவனத்தில் பொருட்கள் நியாயவிலையில் வாங்கி மன நிறைவடைவீர்!

எல்லோருக்கும் டி.யு.சி.எஸ். - காமதேனு
எக்காலங்களிலும் டி.யு.சி.எஸ். - காமதேனு
வருக! வருக! சுயசேவைப்பிரிவுகளுக்கு
பெருக! பெருக! உங்கள் மகிழ்ச்சி.

### *சுயசேவைப்பிரிவுகளின் விவரம் :*

| | | |
|---|---|---|
| 1. | காமதேனு சுயசேவைப்பிரிவு (மெயின்) | - தேனாம்பேட்டை (வானவில் அருகில்) |
| 2. | காமதேனு சுயசேவைப்பிரிவு (அனெக்ஸ்) | - தேனாம்பேட்டை (ஏ.ஜி. ஆபிஸ் எதிரில்) |
| 3. | நுங்கம்பாக்கம் சுயசேவைப்பிரிவு | - நுங்கம்பாக்கம் காவல் நிலையம் எதிரில் |
| 4. | பெசன்ட்நகர் சுயசேவைப்பிரிவு | - பெசன்ட்நகர் பஸ் முடிவிடம் அருகில் |
| 5. | அசோக்நகர் சுயசேவைப்பிரிவு | - அசோக்நகர் பில்லர் அருகில் |
| 6. | ராஜா அண்ணாமலைபுரம் சுயசேவைப் பிரிவு | - முதல் மெயின் ரோடு, இராஜா அண்ணாமலைபுரம் |
| 7. | ரெடிமணி சுயசேவைப்பிரிவு | - டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை |
| 8. | திருவல்லிக்கேணி சுயசேவைப்பிரிவு | - பெரிய தெரு, திருவல்லிக்கேணி |
| 9. | சாலிகிராமம் சுயசேவைப்பிரிவு | - ஆற்காடு ரோடு, சாலிகிராமம் (நுகர்வோர் கூட்டுறவு இணைய வளாகத்தில்) |
| 10. | திருவான்மியூர் சுயசேவைப்பிரிவு | - ஜெயந்தி தியேட்டர் அருகில் |

பொதுமக்களுக்கும், வாடிக்கையாளர்களுக்கும் எங்கள்
நல்வாழ்த்துக்கள்.

*தனி அலுவலர்*
*டி.யு.சி.எஸ். லிட்.*



### அடுத்த இதழில்...

●● வறுமையினிடையிலும் வெற்றித் தங்கம்!
- கவர் ஸ்டோரி

●● சந்திப்பு :
ராம் ஜெத்மலானி

''பாரு. ரங்கா வெறும் ஹோட்டல் முதலாளி இல்லை. நல்ல நண்பர் கூட. நம் கல்யாணத்திற்கு இவர் வராததில் எனக்கு நிறைய வருத்தம்.''

''ஆமாம். ராஜஸ்தானில் கல்யாணம். நான் சபரியை விட்டு ஒரு வாரம் பத்து நாள் எப்படி வருவதாம்? ஸிஸ்டர் யூ ஆர் வெரி லக்கி. மோகன் ஈஸ் எ குட் பாய். டேய் கிருஷ்ணா....''

பக்கத்து மேஜையைக் கவனித்துக் கொண்டிருந்த கிருஷ்ணன் வந்தான்.

''என்ன ரங்கா?''

''ரெண்டு பிளேட் ஜாங்கிரி கொண்டு வா. பில்லுல சேக்காதே. புது ஜோடிடா. நம்ப சபரில ஸ்வீட்டோட லைஃபை ஆரம்பிக்கட்டும்.''

''ஓ.கே. ரங்கா. ஜமாய்ச்சிடறேன்'' என்று பையன் ஓடினான்.

மோகனின் மனைவி மறுப்புத் தெரிவித்தாள் போலும் காசின்றி இனிப்பை உண்ண.

''நோ. நோ. ரங்கா ஓட்டல்காரன் இல்லை. ஃப்ரண்ட் சொன்னேனே. சாப்பிடு. ரங்கா தப்பா நெனைக்காது. ரங்கா ஜாங்கிரி ஏ.ஒன்.''

''ஆமா. சாப்பிடுங்க. இன்னிக்கு ஒரு நாள்தானே ஃப்ரீ ஸ்வீட்! நாளைலேர்ந்து உங்க வீட்ல அடுப்பு எரியக் கூடாது. மோகனை இழுத்துக்கிட்டு நீங்களே இங்க வந்துடணும். டேஸ்ட் பாருங்க. சபரியைப் பத்தி அப்புறந்தான் உங்களுக்குத் தெரியும்! ஹலோ பாட்டீ... வெல்கம்... வெல்கம்'' என்று காரிலிருந்து இறங்கிய பட்டுப் புடைவை பாட்டியை நோக்கி நகர்ந்தான் ரங்கா. போகிற போக்கில் மோகனிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டான்.

**ப**ட்டுப் புடைவை பாட்டி அம்பாஸிடரில் இருந்து இறங்க கஸ்தூரிரங்கன் உதவினான். பாட்டியின் கரம் பஞ்சினால் செய்யப் பட்டது போல் இருந்தது. பாட்டியின் பையன், செக்ரட்டேரியட்டின் ஐ.ஏ.எஸ். சஃபாரியும், பைப்புமாக இறங்கி ரங்கனைப் பார்த்துக் கையசைத்தார். பைப்பின் புகையினூடே 'ஹலோ' சொன்னார்.

பாட்டி ரங்காவின் கையைப் பற்றி மெல்ல நடந்தாள்.

''சௌக்கியமா இருக்கியாடா?''

''உங்க ஆசிர்வாதம் பாட்டி.''

''என்னமோ போ. ஒன் கடை இட்லின்னா என் நாக்கு வேணும், வேணும்னு ஏங்கறது. கட்டை சாயற வரைக்கும் உன் இட்லிதான். மொளகாப் பொடிதான். நெய்தான்.''

''நீங்க நூறு வருஷத்துக்கு மேல நல்லா இருப்பீங்க பாட்டி.''

''அது கெடக்கட்டுண்டா. ஒரு நல்ல பொண்ணாப் பாத்துக் கட்டிக்கச் சொல்றேனே. ஏன் கேக்க மாட்டேங்கறே. ஒன் ஜாதகத்தைக் கொடேன். எனக்குத் தெரிஞ்ச பொண் குட்டிகள் ஒரு பத்துப் பதினஞ்சி இருக்கு. நான் கேட்டுப் பாக்கறேனே...''

''பாட்டி... பாட்டீய்...''

''இவன் ஒருத்தன். பேச விடாம. என்னடா?'' என்று கிழவி திரும்பி மருமகளின் தோளில் இருந்து கத்திய இரண்டு வயதுப் பேரனைப் பார்த்துக் கேட்டாள்.

''அப்பலேர்ந்து கத்தறானே'' என்றாள் மருமகள்.

''என்ன... ஜிங்குலுக்கு என்ன வேணும்? ஐஸ்க்ரீமா? குல்ஃபி மலாயா? என்கிட்டச் சொல்லு.''

''ரங்கா மாமா. பாத்ரூம்.''

''அவ்வளவுதானே. என்கிட்டே வா'' என்று குழந்தையை வாங்கிக் கொண்டான். ''பாட்டி, நீங்க போய் உக்காருங்க. நான் ஜிங்குலுவை பாத்ரூமுக்குக் கூட்டிட்டுப் போய் வந்துடறேன்'' என்று பையனுடன் நடந்தான்.

''ரங்கா மாமா. அர்ஜன்ட்'' என்று ரங்காவின் காதில் ரகசியம் போல் பேசினான் பையன்.

''ஓடலாம் வா. ஜட்டியை அவுத்துடு.''

பையன் ஜட்டியை இழுத்து விட்டான். ரங்கா அவனை இரண்டு கைகளாலும் ஆற்றில் கொண்டு போய்ச் சேர்க்கிற மண் பிள்ளையாரைத் தூக்கிப் போவது போல ஏந்தி ஓடினான்.

குழந்தை தொடையிடுக்கில் கைகளால் அழுத்திக் கொள்ள, அடக்க முடியவில்லை.

எதிர்ப்பட்ட அந்த இளமையான, அழகான, வடிவான பெண், கண்களை அகல விரித்து, 'வீல்' என்று அலறினாள்.

(தொடரும்)

# நாஞ்சிலார் அறிக்கை..?

## நீங்கள் கேட்டவை :: தராசு

● எஸ். காந்திராஜ், மதுரை.

*? டாக்டர் பட்டம் தருவது இவ்வளவு மலிவாகிப் போனதற்குக் காரணம்?*

! ஐயோ! மலிவு இல்லே, ஐந்து லட்ச ரூபாயாக்கும்!

● எச். மோகன், மன்னார்குடி.

*? இந்திய கிரிக்கெட் அணியின் முயற்சி இலங்கை அணியிடம் செல்லுபடியாகுமா?*

! விம்பிள்டன் முடிவுகள் குறித்து பெட் வைக்க இப்பத்தான் எட்டு ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுத்துக் கணக்குத் தீர்த்திருக்கேன். நீங்க வேற....

● மு. அய்யூப்கான், சந்திரம்கருப்பூர்.

*? ராகுல் காந்தியை அரசியலுக்கு இழுக்க காங்கிரஸார் முயற்சி செய்கிறார்களாமே?*



★ அஸ்தமன சூரியன்

! அது தப்புங்க; முதல்ல பிரியங்கா, அப்புறம்தான் ராகுல். அதானே நியாயம்!

● எம். குணசேகரன், வேலாயுதம் பாளையம்.

*? ஜோதிபாசு, பிஜு பட்நாயக், லல்லு பிரசாத் யாதவ் – யாருடைய நிர்வாகம் பாராட்டும்படி இருக்கிறது?*

! என்னுடைய வோட்டு, தொடர்ந்து 16 வருஷமாக முதல்வராயிருந்து வருகிறவருக்குத்தான்.

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

*? நூருல் ஹாசன் மறைவு குறித்து?*

! மத்திய அரசுக்குப் பிரச்னைகளை உருவாக்காத ஒரு சில கண்ணியமான கவர்னர்களில் ஒருவர். இந்தியக் கலைகளிலும் பண்பாட்டிலும் மெய்யான ஈடுபாடும் மதிப்பும் கொண்டவர்.

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.

*? நாட்டில் முதல் முறையாக பாட்னா கோயிலில் ஒரு ஹரிஜன் தலைமை அர்ச்சகராக நியமிக்கப்பட்டுள்ளது குறித்து?*

! கி.வீரமணி கூட பாராட்ட வேண்டிய நிகழ்ச்சி. தகுதி உள்ளவரா என்பதுதான் இந்த நியமனத்துக்கு முக்கியம். ஜாதியோ, ஒதுக்கீடோ அல்ல.



★ பாதிப்பு....



★ பரீட்சையில் புத்தகம்!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? "ஜெயலலிதா சிம்மராசிக்காரர். அவர் மீது குற்றம் சுமத்தினால் குற்றம் சுமத்தியவர்களே குற்றவாளியாக மாறுவர்" என அமைச்சர் பட்டாபிராமன் கூறுகிறாரே?*

! இது வசவா, ஜோசியமா என்று அமைச்சர் தெளிவுபடுத்தினால் நல்லது!

● ஹஜ்பிரியன், சென்னை.

*? அமெரிக்க மிரட்டலுக்குப் பணிந்து, ராக்கெட் தொழில் நுட்பத்தை இந்தியாவுக்கு இல்லை என்று ருஷ்யா கூறி விட்டதே?*

! ஒரு வகையில் நல்லதுதான். 'ஐந்து வருஷங்களுக்குள் நாமே அந்தத் தொழில் நுட்பத்தை இங்கு அபிவிருத்தி செய்துவிட முடியும்' என்று ராஜா ராமண்ணாவை சவால் விடச் செய்திருக்கிறதே!

● எஸ். துரை, கொ. கருப்பூர்.

*? "காங்கிரஸ் எம்.பிக்கள் தலையாட்டி பொம்மைகள்" என்கிறாரே, கு. ப. கிருஷ்ணன்?*

! அதுவாவது தேவலாம், அ. தி. மு. க. எம். பிக்கள் உதட்டைக் கூட அசைப்பதில்லையே!



★ 16 ஆண்டுகளாக.....

● கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? "ஜெ. அரசை 25 ஆண்டுகளுக்கு அசைக்க முடியாது" எனக் கூறியுள்ளாரே நெடுஞ்செழியன்?*

! ஹும், நிதி அமைச்சரல்லவா? இப்படித்தான் கஞ்சத்தனமாகப் பேசுவார். அமைச்சர் சின்னசாமியைப் பாருங்கள்; '50 ஆண்டுகளுக்கு ஜெ ஆட்சி' என்று உத்தரவாதம் அளித்திருக்கிறார்!


✱ சூப்பர்....


✱ ..... டென்னிஸ்


✱ ராக்கெட் சவால்!


✱ வசவா? ஜோசியமா?

● அ. அப்துல் காதர், சிங்கப்பெருமாள் கோயில்.

? **"நல்ல எழுத்தாளன் மார்க்ஸீய பாதிப்புக்கு உட்பட்டவனாகத்தான் இருப்பான்" என்கிறாரே, வாஸந்தி?**

! அவசியமில்லை, மனித நேயம் உள்ளவனாக இருந்தால் போதும்.

● மணியன், திருமங்கலம் ❑

? **ஜே.பி.சி. நேர்மையாகச் செயல்படும் என்று நம்பலாமா?**

! போகிற போக்கைப் பார்த்தால் அந்த நம்பிக்கை வலிமை இழக்கிறது. ஏகமனதான அறிக்கையாக இராமல் மாறுபட்ட கருத்தைக் குறிக்க அங்கத்தினர்கள் சிலருக்கு வாய்ப்பு வழங்கப்பட்டாலே பெரிய காரியம்!

● சந்தனப்பிரியன், சித்தோடு.

? **"கருணாநிதியைப் பழிப்பவர்களுக்கு எய்ட்ஸ் வரும்" என்று வெற்றி கொண்டான் பேசியுள்ளாரே?**

! அவர் ஸ்டைல் அதுதான்! பகுத்தறிவுக்குப் பொருந்துகிற மாதிரி அவர் பேசினால் தோல்வி கொண்டான் ஆகிவிடுவார்!

● என். சம்பத், தூத்துக்குடி.

? **வீரப்பன் கைது, பஞ்சாயத்துத் தேர்தல் – எது நிச்சயம் நடக்கும்?**

! நம்ம பேரப்புள்ளைங்க காலத்துல அவங்களைப் பேப்பர் படிக்கச் சொல்லி கேட்டுத் தெரிஞ்சுக்குவோம்!

● என். ஆறுமுகம், பரமக்குடி.

? **'பரீட்சை எழுதும்போது புத்தகங்களை உபயோகித்துக் கொள்ள பல்கலைக்கழக மாணவர்களை அனுமதிக்கலாம்' என்று சென்னா ரெட்டி யோசனை கூறியுள்ளாரே?**

! புரட்சிகரமான கருத்து அல்ல. அமெரிக்காவில் ஏற்கெனவே நடைமுறையில் இருப்பதுதான். இன்று எல்லாத் தகவல்களும் நூல்களிலும் கம்ப்யூட்டர்களிலும் பதிவாகியுள்ளன. தேவையான அறிவை எங்கிருந்து எப்படி பெறுவது என்பதை உணர்ந்து செயலாற்றத் தெரிவதுதான் முக்கியம். பரீட்சையின் போது பதில் நேரடியாகப் புத்தகத்தில் அகப்பட்டு விடாத மாதிரி கேள்வி அமையும். புத்தகத்தில் குறிப்பிட்ட பகுதியைப் படித்து, சிந்தித்து, சுயமாகத்தான் பதில் எழுத வேண்டியிருக்கும்! பிட் அடிப்பது, காப்பி அடிப்பது, குருட்டாம் போக்கில் டிக் அடிப்பது இதற்கெல்லாம் வழியே இல்லை. மெய்யான அறிவு வளர்ச்சிக்கு உதவும் மார்க்கத்தை ஆளுனர் கூறியிருக்கிறார்.

● எஸ். இராமசாமி, சென்னை.

? **மசூதி இடித்த மதவெறியரின் படத்தை அட்டையில் போட்டு, அவரைப் பிரதமராகவும் ஆக்கிய உமது உள்நோக்கம் என்ன?**

! நாம் ஒன்றும் அவரைப் பிரதமராக்க முடியாது; கேள்விக்குறிதான் போட முடியும்! அவர் பிரதமராவதும் ஆகாததும் மக்களிடம்தான் உள்ளது. மக்களைச் சிந்திக்கச் செய்வதுதான் கவர் ஸ்டோரியின் நோக்கம்.

● ஆர்.எஸ். நாராயணன், சென்னை – 42.

? **சமீபத்தில் தங்களை மகிழ்ச்சியில் துள்ள வைத்த....**

! வேறென்ன, லியாண்டர், கிருஷ்ணன் வெற்றிகள் தாம். Poor Video reproduction regretted என்ற தூர்தர்ஷனின் கையாலாகாத்தனத்தையும் பொறுத்துக் கொண்டு டேவிஸ் கோப்பை செமி ஃபைனல்லை இருவரும் எட்டிப் பிடித்த சரித்திர சம்பவத்தைப் பார்த்து உடலாலும் உள்ளத்தாலும் துள்ளினோம். சூப்பர் டென்னிஸ் போங்கள்!

● பாலசுப்பிரமணியன், செங்குன்றம்.

? **நாஞ்சிலார் அறிக்கை?**

! 'ச்சீ! இந்தப் பழம் புளிக்கும்' என்ற ஈசாப் கதையை நினைவூட்டும் சம்பவம். அவர் அரசியல் வாழ்க்கை இனி அஸ்தமன சூரியன்.

● சி. ரஜினி அருள், மணக்காடு.

? **ஊழல் பேர்வழிக்கு இவ்வளவு ஆதரவு தெரிவித்து கல்கி தலையங்கம் தீட்ட வேண்டுமா?**

! சரியாகப் படியுங்கள். ஒரு கோடி ரூபாய் ஊழல் குற்றச்சாட்டில் உண்மைகள் கண்டறியப்பட வேண்டும் என்றுதான் கல்கி கூறுகிறதே தவிர, ஹர்ஷத்தின் பலகோடி ஊழலை நியாயப்படுத்தவும் இல்லை, ஆதரவு தெரிவிக்கவும் இல்லை.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
மணியன்,
மெயின் ரோடு,
திருமங்கலம் - 609 702.

நவரஸ நினைவுகள் : 27

# சூரிய மானஸம்: என் கலை வாழ்வின் ஒளிச்சிகரம்!

**சௌகார் ஜானகி**

இந்தியா திரும்ப நான் விருப்பம் தெரிவித்த போது என் மகனோ மகளோ மறுப்புச் சொல்லவில்லை. நாற்பத்து மூன்று வருடத் திரையுலக வாழ்க்கையில் மிகச் சுதந்திரமாக இருந்துவிட்டு, அமெரிக்காவில் போய், என் குழந்தைகளேயானாலும் கூட அவர்களைச் சார்ந்து என்னால் இருக்க முடியவில்லை.

இங்கு திரும்பி வந்த என்னை, திரையுலக வாய்ப்பு மீண்டும் துரத்தியது. 'குட்பை' சொல்லிவிட்ட போதிலும், ஒரு மலையாளப் பட வாய்ப்பை நான் ஏற்க முடிவு செய்தேன்.

'அழகன்' படத்தில் மம்முட்டியுடன் எனக்கு அறிமுகம் ஏற்பட்டது. அவர், 'சூரியமானஸம்' என்ற மலையாளப் படம் எடுக்கப்பட்டபோது, அதில் வரும், தாய் கேரக்டருக்கு நான் மிகவும் பொருத்தமாக இருப்பேன் என்று கூறியதன் பேரில், என்னை நடிக்க அழைத்தார்கள்.

மம்முட்டியை ஒரு சில முறைகளே நான் சந்தித்திருந்தாலும் அவர் பண்புடனும் மரியாதையுடனும் பழகிய விதம் எனக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. 'சூரிய மானஸம்' படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டது மம்முட்டியின் அன்பு காரணமாகத்தான்.

சூரியமானஸம் ஓர் அற்புதமான படம். அதில் மம்முட்டியின் அம்மாவாக ஆழ்ந்த ஈடுபாட்டுடன் நடித்தேன். நான் ஏற்ற குணச்சித்திர வேடங்களிலேயே எனக்கு அதிகம் திருப்தி அளித்தது இந்த வேடம்தான். பொதுவாக நான் விருதுகளுக்காக ஒருபோதும் ஏங்கியது இல்லை என்றாலும் இப்படத்தில் என் நடிப்புக்கு நிச்சயமாக தேசிய அளவிலோ, மாநில அளவிலோ விருது கிடைக்கும் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அத்தகைய கௌரவம் எதுவும் எனக்கு வாய்க்கவில்லை.

இது, எனக்குப் பெரிய ஏமாற்றத்தைத் தந்தது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அதோடு 'இனி எந்த சினிமா வாய்ப்புத் தேடி வந்தாலும் ஏற்பதில்லை என்று முடிவு செய்யக் காரணமாக அமைந்து விட்டது.

சினிமா வேண்டாம் என்று முடிவு எடுத்த பின், வீட்டில் தனியாய் உட்கார்ந்து கொண்டு என்ன செய்ய? ரோஜாப் பூக்களின் அழகில் எவ்வளவுதான் மயங்குவது? தொடர்ந்து டீ.வி., வீடியோ பார்த்துக் கொண்டிருப்பது சாத்தியமா என்ன? நிலவிலும், நட்சத்திரங்களிலும் மனம் லயிக்க நேரம் காலம் உண்டே! என் ஒருத்திக்காக எவ்வளவுதான் சமைப்பது?....

'அமெரிக்காவில் துவங்க விரும்பிய உணவகத்தைச் சென்னையிலேயே ஆரம்பித்தால் என்ன?' என்ற எண்ணம் ஏற்பட்டது. 'புதிதாக ஒன்றை ஆரம்பிப்பதைவிட, ஏற்கெனவே நடக்கிற ஒன்றை வாங்கி, மேம்படுத்தி நடத்தினால் என்ன?' அந்தச் சமயம் பார்த்து, நாளிதழ் ஒன்றில் ஒரு ரெஸ்டாரண்ட்டை எடுத்து நடத்தத் திறமையான ஒர்க்கிங் பார்ட்னர் தேவை என்கிற விளம்பரம் கண்ணில் பட்டது.

சம்பந்தப்பட்டவர்களுடன் பேசி, சேத்துப்பட்டு, ஹாரிங்டன் ரோடில் மிகச் சாதாரணமான முறையில் இயங்கி வந்த 'கோகனட் குரோவ்' என்ற அந்த உணவகத்தை லீசுக்கு எடுத்துக் கொண்டேன்.

அங்கே நானே விதம் விதமான சைவ, அசைவ உணவு வகைகளைச் சமைத்து, உணவருந்த வருகிறவர்களுக்குப் பரிமாறி உபசரிக்கிறேன். என் சமையலின் ருசிக்காகவும், இனிய உபசரிப்பு மற்றும் சூழலுக்காகவும் இப்போது நிறையப்பேர் கோகனட் குரோவுக்கு வருகிறார்கள். 'உணவு மிக ருசியாக இருக்கிறது' என்று அவர்கள் பாராட்டி விட்டுச் செல்லும் போதுதான் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது!

என் நடிப்புத் திறனுக்குப் பெற்ற அத்தனை பாராட்டுக்களுக்கு இணையாக இந்த வயிறு நிறைந்த பாராட்டுக்களையும் நான் மதிக்கிறேன்; பெருமைப்படுகிறேன்.

சின்ன வயதில் விறகு அடுப்பில் சமைத்துக் கொண்டிருந்த நான் இன்று மைக்ரோவேவ் அடுப்பில் நவீன உணவுகள் தயாரிக்கிறேன். இந்த இரண்டு துருவ முனைகளுக்கிடையே என் வாழ்க்கையின் வேறுபட்ட அனுபவங்கள்தான் எத்தனை!

ஜொலிப்பும் பந்தாவும் மிக்க சினிமா உலகில் எளிமையை விரும்புகிறவளான நான் எதிர் நீச்சல் போட்டு சமாளித்தது ஒரு பக்கம் இருக்க, சின்னச் சின்ன மகிழ்ச்சிகள் பலவற்றைத் தியாகம் செய்யவும் வேண்டியிருந்தது. பணத்திலும் பகட்டிலும் மிதக்கும் திரையுலகில் பணத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்த போதிலும் பணம் மட்டுமே முக்கியமல்ல, உண்மையும், உழைப்பும் மனத் திருப்தியும்தான் வாழ்க்கையின் ஜீவ நாடிகள் என்ற கொள்கையைக் கைவிடாமல் என்னால் வாழ முடிந்தது. அதனால்தான் எனது அறுபத்திரண்டாவது வயதில் ஒரு புதிய முயற்சியில் இறங்கி, கோகனட் குரோவில் சாப்பிட வருகிறவர்களுக்கு வயிறு நிறையச் செய்வதுடன் அங்கு பணிபுரியும் சுமார் நாற்பது ஊழியர்களின் குடும்பங்களையும் வாழ வைக்கும் மனத் துணிவு எனக்கு வாய்த்திருக்கிறது. இந்த மனத் துணிவே என் உடலுக்கும் வலு அளிக்கிறது.

பள்ளியிறுதிப் படிப்பைக் கூட முடிக்காமல் வாழ்க்கையைத் தொடங்கிய சராசரி பெண்ணான எனக்குத் திரையுலகம்தான் ஓர் அந்தஸ்தைக் கொடுத்தது என்பதை மறுக்க முடியாது. சினிமா உலகில் நுழைந்திருக்காவிட்டால், கோடிக் கணக்கான சராசரி பெண்களுள் ஒருத்தியாகத்தான் நான் காலத்தைக் கடத்தியிருப்பேன். நிஜ வாழ்க்கையில் கனவிலும் நினைக்க இயலாத ஜட்ஜ், கலெக்டர், வக்கீல், டாக்டர் என்ற பலவிதமான பாத்திரங்களில் வாழ்ந்து காட்ட சினிமா உலகம் எனக்கு வாய்ப்பு அளித்தது!

சினிமாவில் நான் ஏற்காத ஒரு பாத்திரம் அரசியல்வாதி கதாபாத்திரம். ஆனால் நிஜ வாழ்க்கையில் சில நாட்கள் அரசியலிலும் இருக்கிற சந்தர்ப்பம் எனக்கு வாய்த்தது. சிவாஜி கணேசன் காங்கிரஸிலிருந்து விலகி தனிக் கட்சி ஆரம்பித்த போது அக்கட்சியின் தேர்தல் பிரசாரப் பணியில் நான் உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவரிடம் கொண்ட மரியாதை காரணமாக நான் சம்மதம் தெரிவித்தேன்.

பின்னர் யோசித்துப் பார்த்தபோது நான் அரசியலில் புக எந்த விதத்திலும் பொருத்தமானவள் அல்ல என்பது எனக்கே புரிந்தது. எதையுமே மனத்தில் வைத்துக் கொள்ளாமல் வெளிப்படையாகப் பேசி விடுகிற குணம் எனக்கு. இதனால் திரையுலகிலேயே எனக்குப் பல பிரச்னைகள் ஏற்பட்டிருக்கின்றன. இத்தகைய சுபாவமுள்ள

★ கோகனட் குரோவில்....



நான் எப்படி அரசியலுக்குப் பொருத்தமாக இருக்க முடியும்? எனவேதான் தமிழக முன்னேற்ற முன்னணியில் எனக்குத் தரப்பட்ட பொறுப்பிலிருந்து சீக்கிரமே என்னை விடுவித்துக் கொண்டேன்.

என் வாழ்க்கையில் நான் செய்த மிகப் பெரிய தவறுகள் மூன்று.

- கார் ஓட்டக் கற்றுக் கொள்ளாதது;
- எதிர்காலத்துக்காக ஒரு கணிசமான தொகைக்கு ஆயுள் காப்பீட்டு பாலிஸி எடுத்துக் கொள்ளாதது;
- எல்லோரும் நல்லவர்கள் என்று நம்பியது.

அதே சமயம் நான் செய்த நல்ல காரியங்களும் சில உண்டு. என் குழந்தைகளுக்கு முழுச் சுதந்திரம் கொடுத்து, நல்ல முறையில் வளர்த்து ஆளாக்கினேன்; நடிப்புத் துறையில் முழுமையான ஈடுபாட்டுடன் உழைத்து ரசிகர்கள் மனத்தில் நீங்காத இடம் பிடித்திருக்கிறேன். இந்த நாட்டின் நல்ல பிரஜையாக, அரசாங்கத்தை மதித்து, மனசாட்சிக்கு விரோதமில்லாமல் வருமான வரி கட்டினேன்; இப்போதும் கட்டிக் கொண்டு வருகிறேன்.

நாற்காலியில் சாய்ந்து கொண்டு, இதையெல்லாம் நினைத்துப் பார்க்கிற போது, மகிழ்ச்சியாகவும், பெருமையாகவும்தான் இருக்கிறது. ஆனால் இந்த நிலைமையை அடைய நான் பட்ட கஷ்டங்கள் தான் எத்தனை? நடிகை என்கிற முறையில் எனக்குரிய கௌரவத்தை அரசாங்கம் கொடுக்கத் தவறி விட்டது. அது பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால் நேர்மையாய் வரி செலுத்தும் பிரஜை என்கிற முறையில் என்னுடைய எஞ்சியுள்ள நாட்களில் அளவுக்கு மீறி வரி செலுத்த வேண்டிய கட்டாயத்திலிருந்து நான் விடுவிக்கப்படலாம் அல்லவா? இதை நான் எனக்காக மட்டும் கூறவில்லை. திரையுலகுக்கு அப்பாற்பட்ட பல்துறைக் கலைஞர்கள் சார்பிலும் பொதுவாகக் கூறுகிறேன். 'நேர்மையாய் வரி செலுத்துபவர்களுக்கு வெகுமதி' என்று அரசாங்கம் சொல்லிக் கொண்டிருப்பது அர்த்தமற்றதாகும். போதுதான் வரி ஏய்ப்பு, கறுப்புப்பண ஆதிக்கம் முதலியவை தலையெடுக்கின்றன. ஒரு கலைஞர் மறைந்த பின் மரியாதை செலுத்துவது, விருது வழங்குவது இதையெல்லாம் விட, வாழும் போதே நிம்மதிக்கு வழிவகுப்பது, எவ்வளவோ மேல்!

என்னுடைய நாற்பத்தி மூன்று வருட கலைப் பயணத்தில் பாராட்டியவர்கள் பலர்; ஊக்குவித்தவர்கள் பலர்; நடிகையாக மட்டுமின்றி ஒரு முழுமையான பெண்ணாகப் புரிந்து கொண்டு போற்றியவர்கள் பலர். கடுமையாக விமர்சித்தவர்கள் பலர்; நடிகையாகவே ஏற்றுக் கொள்ளாதவர்கள் சிலர்!

இவர்கள் அனைவருமே என் வாழ்க்கையை நான் செம்மைப்படுத்திக் கொள்ள எனக்கு உதவியவர்கள்தான். இவர்கள் அனைவருக்குமே நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

கல்கி பத்திரிகையின் லட்சக்கணக்கான வாசகர்களுடன் என் நினைவுகளை இந்தத் தொடர் மூலமாக பகிர்ந்து கொள்ள முடிந்ததில் எனக்கு முழுமையான மனநிறைவு கிடைத்தது. இந்தப் பணியில் எனக்குப் பெரிதும் உதவியாக இருந்தவர் பத்திரிகையாளர் எஸ். சந்திரமௌலி. என் எண்ணங்களையும் உணர்வுகளையும் மிகைப்படுத்தாமல் உங்களிடம் கொண்டு சேர்த்தவர் இவரே. இத் தொடருக்குப் படங்கள் கொடுத்து உதவிய ஃபிலிம் நியூஸ் ஆனந்தனுக்கும் நான் நன்றி சொல்ல வேண்டும்.

(முற்றும்)

படம் : கோபிநாத்

---

## வாங்கும் ஆசைக்கு வசமான வியாபாரம்!

முன்பெல்லாம், "ஸேல்! ஸேல்!" என்று தான் விளம்பரப்படுத்துவார்கள். இப்போது "சூப்பர் ஸேல்" என்கிறார்கள். இந்தத் தள்ளுபடி வியாபாரத்தில் புத்தகங்கள், காலணிகளும் உண்டு. ஆனால் அதிகம் விலை போவது ஜவுளி தான். புடைவைகள், ரெடிமேட் ஆடைகள், படுக்கை விரிப்புகள் இத்யாதி.




ஒரு வாரம் பத்து நாட்களுக்கு ஓர் அரங்கை வாடகைக்கு எடுத்து, "சூப்பர் ஸேல்" விளம்பரம் தந்து தள்ளி விடுகிறார்கள். பெரும்பாலும் ஏற்றுமதிக்காகத் தயாரிக்கப்பட்டு அதில் குறைபாடு இருப்பதால் 'ரிஜெக்ட்' ஆகிறவைதாம். இவற்றை ஸேல் வியாபாரிகள் வாங்கி வந்து, நகர மக்களின் வாங்கும் ஆசையைப் பூர்த்தி செய்து லாபமடைகிறார்கள்!

"கம்பளா பார்த்துட்டு வரலாமே என்றாள் என் மனைவி. அந்தக் 'கம்பளா' வின் விலை தொளாயிரத்து எழுபது ரூபாய் என்பது அப்புறம்தான் புரிந்தது!" என்கிறார் சூப்பர் ஸேல் அரங்கில் புகுந்து திரும்பிய ஒரு கணவர்.

— ஜூலி.



# சூப்பர் அரசியல்வாதி!

● காவிரி நீர் வேண்டாம், ராவ் வாழ்க! - தில்லியில். காவிரி நீர் வேண்டும், ஜெயலலிதா வாழ்க! - சென்னையில். மூப்பனார் ஒழிக! அதனால் ஜெயா வாழ்க! ஜெயா ஒழிக! அதனால் மூப்பனார் வாழ்க! எல்.டி.டி.ஈ. ஒழிக! அதனால் தி.மு.க. ஒழிக! பா.ம.க வாழ்க! அதனால் எல்.டி.டி.ஈ. வாழ்க! மேலிடம் மிரட்டியதால் மீண்டும் எல்.டி.டி.ஈ. ஒழிக!

இப்படியாகக் கொண்ட கொள்கையில் உறுதியுடன் இருக்கும் வாழப்பாடி யாரையே சூப்பர் அரசியல்வாதியாக நான் கருதுகிறேன்.

- கை.ம. லெனின், சேலம்.

● என்னைக் கவர்ந்த சூப்பர் அரசியல்வாதி... வேறு யார்? அமைதி புகழ் பி.வி. நரசிம்மராவ்தான்! என்னே ஒரு சாத்வீகம்! இடுக்கண் வந்தபோதும் நகைக்காத என்னே ஒரு முகம்! 'ஒரு கோடி கொடுத்தேன்' என பல கோடிக்காரர் இவர்மேல் குற்றம் சுமத்திய போதும், அதையும் முகம் கோணாமல் வேடிக்கையாக எடுத்துக் கொண்டு, அமைதிகாக்கும் இவர், கோடியில் ஒருவர்தான்! 'கோடி வாங்கினார்' 'கோடி வாங்கினார்' என்று அவரைச் சாடி வரும் சில்லறை அரசியல்வாதிகளே! நாளைக்கே அவர், 'அமைச்சர்களெல்லாம் லட்ச லட்சமாய் வாங்கறப்ப, நான் பிரதமர் - கோடி வாங்குவதில் என்ன தப்பு!' என்று கேட்டால் எங்க ஓடிப்போவீங்க?

- ராஜமாதங்கன், சிதம்பரம்.

● பல கட்சிகளுக்குத் தாவி, கடைசியில் ஜனதா தளத்தில் தன்னை இணைத்துக் கொண்டு, தற்போது அந்தக் கட்சியிலிருந்தும் ராஜி னாமா செய்து விட்டதால் 'எங்கே நம் கட்சியில் சேர்ந்து விடுவாரோ' என்று அனைத்துக் கட்சித் தலைவர்களும் தொண்டர்களும் கதிகலங்கிப் போய் இருக்கக் காரணமான சிவாஜி கணேசன் அவர்கள்தான் என் கணிப்பில் சூப்பர் அரசியல் வாதி.

- வீ.பா. கிருஷ்ணன்,
மதுரை - 17.

● ஒரு பத்துப் பேரின் ஆதரவு கூட இல்லாத சுப்பிரமணியசுவாமி, எடுத்தேன் கவிழ்த்தேன் என்ற பாணியில் அறிக்கைகள் விடுகிறார். அதற்குத் தக்கபடி காக்காய் உட்கார பனம்பழம் விழுந்த கதையாய்ச் சில சம்பவங்கள் நடக்கின்றன. அதை வைத்துக் கொண்டு தேசிய அளவிலும் சரி, மாநில அளவிலும் சரி, யார் ஆட்சிக்கு வந்தாலும் சரி, யார் ஆட்சி கவிழ்ந்தாலும் சரி, அதற்குத் தாம்தான் காரணம் என்று கூறிக் கொண்டு, தம்மை ஒரு கிங் மேக்கராக நினைத்துக் கொண்டு, மாநில அரசுகளை மிரட்டிக் கொண்டு வரும் சுப்பிரமணியசுவாமிதான் இன்றைய அரசியல் உலகில் சூப்பர் அரசியல்வாதி.

- கே.எஸ். வேலுச்சாமி, சேலம் - 1.

● ஆயிரம் கார் பின்தொடர பவனி வருவதன் மூலம் தமிழக மக்களுக்கு எரி பொருள் சிக்கனத்தை உணர்த்தியும் வித விதமான கட்-அவுட்கள் மூலம் ஓவியக் கலைஞர்களுக்கு உதவியும், நிறைய டாக்டர் பட்டங்கள் வாங்குவதன் மூலம் பல்கலைக் கழகங்களுக்குப் பெருமை சேர்த்தும், ஊழல் மலிவதில் மாநிலங்களுள் முதலிடத்தைத் தமிழகத்துக்குப் பெற்றுத் தருவதிலும் எம்.ஜி.ஆர். ஆட்சியை எங்கு தேடினாலும் கிடைக்காத வகையில் ஆட்சி புரிவதிலும் தம்மை மிஞ்ச யாருமில்லை என நிரூபித்துள்ள நமது முதல்வர் புரட்சித் தலைவி, ஆதிபராசக்தி, தமிழக தாட்சர், டாக்டர் ஜெயலலிதா அவர்களே சூப்பர் அரசியல்வாதி!

- ஆர்.ஆர். குமார்,
ஒசூர்.

● எங்கள் கட்சி ஆட்சிக்கு வந்தால், 'கரண்ட்' (மின்சாரம்) எடுக்காத 'சத்துள்ள'

● சிவாஜி



● ஜெயலலிதா



● லட்சுமி





✱ வாழப்பாடி



✱ நரசிம்மராவ்

கரன்தான், இன்றைய அரசியல் உலகில் சூப்பர் அரசியல்வாதி!

- கே.எஸ். வேலுச்சாமி, சேலம் - 4.



✱ தேவிலால்

● இக்கட்டான சமயங்களில் உபயோகிக்க 'காலத்தின் கட்டாயம்' என்ற அருமையான சொற் தொடரை உருவாக்கிய ஆர்.எம். வீரப்பனையே நான் சூப்பர் அரசியல்வாதியாகத் தேர்ந்தெடுக்கிறேன். தம்மால் ஏசப் பட்டவரையே தெய்வமாக்கும் திறமை இவரைத் தவிர வேறு யாருக்கு வரும்? தூக்கியெறியப் பட்ட போதும், மீண்டும் அழைத்துக் கொள் ளப்பட்ட போதும் ஒரே மாதிரி ஸ்தி தப்ரக்ஞ நிலையில் இருக்கும் இவரே சூப்பர் அரசியல்வாதி.

- எஸ். விஜயலக்ஷ்மி, சென்னை - 53.



✱ ஆர்.எம். வீரப்பன்



✱ நாஞ்சில் மனோகரன்



✱ சுப்பிரமணிய சுவாமி

தண்ணீரை விவசாயி களுக்குக் கிடைக்கச் செய் வேன்'' என்று கூறிய தேவிலால் மட்டுமே என் னைக் கவர்ந்த சூப்பர் அரசியல்வாதி!

- மோஹன்ராஜ், கரூர்.

● ''கருவின் குற்றம்'' என்று கருணா நிதியின் பிறப்பையே பழித்துக் கவிதை எழுதிவிட்டு, அதற்கப்புறம், 'மதுராந்தகம் ஆறுமுகத்துக்குக் கையெழுத்தே போடத் தெரியாதே, இதில் கவிதை எப்படி எழுதி னார்?' என்று கிண்டலடித்து விட்டு, பின் னர் 'நான் தலைவர் கலைஞரைப் பற்றி எழுதவில்லை. ஜெ. வைப் பற்றித்தான் எழுதினேன்' என்று தடார் பல்டி அடித்து, பிறகு மன்னிப்புக் கேட்டும் கட்சியில் அனு மதிக்கப்படாத போது, ''சீச்சீ கலைஞர் பழம் புளிப்பு'' கதையாகப் பேசி, மலை யாள மாந்திரீக வேலைகள் செய்து வரும் மந்திரக் கோல் மைனர் நாஞ்சில் மனோ

● இப்போது சூப்பர் அரசியல் வாதி, தூர்வார வந்திருக்கும் லட்சுமிதான். தமிழகப் பெண் களுக்கு உப்பு, புளி, ரேஷன் கடை தவிர வேறொன்றும் தெரியாது என்கிறார். தமிழக சட்ட சபையில் ஏராளமான பெண்கள் எம்.எல்.ஏக்களாக இருப்பதை மறந்தார். பெண் டாக்டர்களும் வக்கீல்களும் சட்ட சபை உறுப்பினர்கள். முதலமைச்சரும் பெண்தான். இவர் என்னவோ தாம் மட்டுமே தமிழக மக்களுக்குச் சேவை செய்ய அவதாரம் எடுத்தவர் மாதிரி சூப்ப ராகப் பிதற்றுகிறார்!

- ஜெயந்தி முத்துக்குமாரசாமி, காரைக்குடி.

சூப்பர் கெண்டலுக்காக ரூ. 100 பரிசு பெறுபவர் : கை.ம. லெனின் கே-1, ஹவுஸிங் யூனிட், சேலம் - 8.

''இட்லிக்குத் தேவை சட்னியா? சாம்பாரா'ங் கிற பட்டி மன்றத்தில கடைசியில என்ன தீர்ப்பு வழங்கினாங்க?''

''இட்லிக்குத் தேவை அரிசியும், உளுந்துமேன் னுதான்!''

- பாளை. பசும்பொன்.



# இப்படியும் ஓர் எம்.எல்.ஏ!

◆ 'பிரதமர் நரசிம்மராவ் - அர்ஷத் மேத்தா' விவகாரத்தை நான்கு பக்கமும் அலசி ஆராய்ந்து, பொறுப்புணர்வோடு எழுதப்பட்டிருந்த தலையங்கம் நடுநிலையானது. காங்கிரசின் கொஞ்ச நஞ்ச மானமும் காப்பாற்றப்பட வேண்டுமானால் நரசிம்மராவ் பிரதமர் பதவியை விட்டு விலகுவதே நல்லது.

சென்னை - 24, இளம்பிறை பாரூக்.

◆ அட்டைப்பட மாமியார் - மருமகள் போல் நிஜ வாழ்வில் அனைவருக்கும் சாத்தியமானால் நிஜமாகவே எல்லாக் குடும்பங்களுமே பல்கலைக் கழகங்கள்தான்....!

சென்னை - 49, மயிலை கோபி.

◆ 'மாமியார் - மருமகள் : மகிழ்ச்சியான உறவின் மனோதத்துவம்' கட்டுரையின் மூலம் பல மாமியார்-மருமகள்கள் திருந்தி ஒற்றுமைக்கு வழி வகுத்து விட்டீர்கள். வாழ்க உங்கள் குடும்ப நலப்பணி.

புதுவை - 3, ஷீலா பாஸ்கரன்.

◆ கல்வியை மூலதனமாகப் பயன்படுத்திச் சுரண்ட நினைக்கும் பண முதலைகள் நிறைந்த நம் நாட்டில், ஏழை மக்களின் கல்விக்காகப் பாடுபடும் எம்.எல்.ஏ. கிருஷ்ணன் போற்றத்தக்கவர். ஏனைய எம்.எல்.ஏக்களுக்கு இவர் ஒரு நல்ல முன்னோடி.

மணக்காடு, வை. பாலசுப்பிரமணியன்.

◆ 'கல்விப் பணியில் கை குலுக்கும் எம்.எல்.ஏ.' - கட்டுரையைப் படித்த போது இது தமிழ் நாட்டில்தானா? அதுவும் இப்படி ஒரு சட்டமன்ற உறுப்பினரா? - என்று சந்தேகம் வந்து விட்டது. இதுபோன்ற நல்லவர்களைப் படம் பிடித்து வாசகர்களுக்கு வழங்குங்கள். நாங்களும் போற்றி மகிழ்வோம்!

பாண்டிச்சேரி - 3, தா. செல்வராசன்.

◆ ''வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு ஊனம் ஒரு தடையே இல்லை என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கும் மாணிக்கம் உண்மையிலேயே பாராட்டப்பட வேண்டியவர்.

கும்பகோணம் - 2,
கீழப்பழையூர் ஜெயா சீனிவாசன்.

◆ சுற்றுச் சூழல் பற்றிய கவிதை சிந்திக்க வைத்தது. இதுபோன்ற கருத்துள்ள பக்கங்களைத் தரும் ஒரே இதழ் கல்கிதான்!

தோழகிரிப்பட்டி, ஆர். முத்துக்குமரன்.

◆ 'பசியின்' உண்மை நிலையை, ''குசி'' மூலம் எங்களையும் உணரவைத்து விட்டார், இரா. முருகன்.

கம்பம், ஏ. முருகன்.

◆ உதாவியாவின் ''பெண்'' சிறுகதை கண்டேன். கல்லூரியில் நடக்கும் உண்மைச் சம்பவத்தை யதார்த்தமான வார்த்தைகளாலேயே ஆரம்பித்துச் சிறப்பான முடிவையும் சொல்லியிருந்தது மனத்துக்கு நிறைவாக இருந்தது.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ முக்கிய பாடங்களில் 99% எடுத்துள்ள என் பெண்ணுக்கு ஒரு வேளை இன்ஜினீயரிங் கிடைத்தால் போக மாட்டேன் என்ற வாக்குறுதியும், அப்படி போகும் பட்சத்தில் மூன்று ஆண்டுகளுக்கான ஃபீஸையும் (சுமார் ரூ. 7000/-) கட்டிவிட்டால் அனுப்புவோம் என்றார்கள். ஒரிஜினல் சர்டிபிகேட்டுகளை வாங்கி வைத்துக் கொண்டு அதைக் கொடுப்பதற்கும் தாமதப்படுத்துகிறார்கள்.

பிலானியில் சென்ற ஆண்டு அட்மிஷன் கிடைத்த ஒரு பெண்ணுக்கு, அங்கு ஒரிஜினல் சர்டிபிகேட் கொடுக்கப்படாததால் அட்மிஷன் மறுக்கப்பட்டது. இந்தக் கல்லூரியில் சுமார் 6000/- நஷ்டமும் அடைந்து, அங்கு சென்று வந்த தன் காரணமாக மேலும் ரூ. 4000/- நஷ்டம் அடைந்து, திரும்ப இங்கு வந்ததும் வேறெங்கும் அட்மிஷன் கிடைக்காமல், பழைய கல்லூரியையே நாடியபோது, மீண்டும் ரூ. 6000/- கட்டச் சொன்னார்கள்!

இந்தக் கொடுமைகளுக்கு முடிவு ஏது?

சென்னை - 92, கிருஷ்ண ராஜ்கோபால்.

◆ கல்கி 18.7.93 இதழில் ''அழவைக்கும் அட்மிஷன் பிரச்னை'' என்ற கட்டுரையில் 81% மதிப்பெண்களே பெற்றிருக்கும் கே.கே. வெங்கடராமன், ''அம்பது, அறுபது பர்சண்ட் எடுத்து பேக்வேர்டாக இருந்தால் இன்ஜினீயரிங் ஈஸியாக கிடைச்சிடுமே'' என்று புலம்பியிருக்கிறார். தவறு. பேக்வர்ட் மாணவன் இன்ஜினீயரிங்கு விண்ணப்பிக்கவே குறைந்த பட்ச தகுதி 65% மதிப்பெண்கள் வேண்டும். இடம் கிடைக்கவோ பேக்வர்ட் மாணவன் 90%, பார்வர்ட் மாணவன் 95% மதிப்பெண் பெற்றிருக்க வேண்டும். கருணாநிதி 1989-ல் ''மோஸ்ட் பேக்வர்ட்'' என்ற பிரிவை ஏற்படுத்த, அப்பிரிவுக்கு இடம் பெற 85% தேவைப்படுகிறது!

திருச்சி - 14, ஆர். இராஜேந்திரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka